# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

"சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 51 திருவள்ளுவர் ஆண்டு 2055, கடகம் – ஆகத்து – 2024




## மாற்றுத்திறனாளிகள் நலத்துறைக் கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| Battery operated wheel chair | – | மின்கலச் சக்கர நாற்காலி |
| Behind the ear hearing aid | – | பின்செவிக் காதொலிக் கருவி |
| Braille watch | – | பிரெய்லி கை மணிப்பொறி |
| Crutches | – | தோள் ஊன்றுக்கட்டை |
| Foldable wheel chair | – | மடக்குச் சக்கர நாற்காலி |
| Goggles | – | காப்பாடி |
| Hearing impaired | – | செவித்திறன் குன்றியோர் |
| Intellectually disabled | – | மனவளர்ச்சிக் குன்றியோர் |
| Rescue Scheme | – | மீட்புத் திட்டம் |
| Magnifiers | – | உருப்பெருக்கிகள் |
| Mentally disabled | – | அறிவுக் குன்றியோர் |
| Metal caliper | – | மாழை இடுக்கியளவி |
| Mobile therapy unit | – | நடமாடும் மருத்துவ ஊர்தி |
| Modular reflective folding sticks | – | ஒளிர்மடக்கு ஊன்றுகோல் |
| Multiple disabled | – | பல்வகைக் குறைபாடுடையோர் |
| Plastic caliper | – | நெகிழி இடுக்கியளவி |
| Retro–fitted petrol scooter | - | இணைச்சக்கரக் கன்னெய்த் துள்ளுந்து |
| Self employment scheme | – | தன்னாக்க வேலைத் திட்டம் |
| Sign language interpreter | – | செய்கை மொழிபெயர்ப்பாளர் |
| Special education | – | சிறப்புக் கல்வி |
| Specific learning disability | – | குறிப்பிட்ட கற்றலில் குறைபாடு |
| Speech and language disability | – | பேச்சு மற்றும் மொழிக் குறைபாடு |
| Tricycles | – | முச்சக்கர மிதிவண்டிகள் |
| Dwarfism | – | குள்ளத்தன்மை |
| Visually impaired | – | பார்வைத்திறன் குன்றியோர் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, கடகம் (ஆடி)
ஆகத்து– 2024

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

தாய்த்தமிழை நாம் எந்தளவுக்குப் போற்றுகின்றோமோ, தாய்மொழியின் நலம் காக்கப் பாடுபட்ட மேன்மையோரையும் அந்தளவுக்குப் போற்றவேண்டியது நம் அனைவரின் கடமையாகும். அத்தகைய சான்றோர்களின் மொழிப்பற்று வாழ்வியலை எடுத்துச்சொல்வதன்வழி இளையதலைமுறையினரின் உள்ளங்களிலும் மொழிப்பற்றுச் சிந்தனையை விதைக்க முடியும்.

அந்தவகையில், 26.08.1883ஆம் நாள் காஞ்சிபுரம் மாவட்டத்தில் அன்றைய துள்ளம் சிற்றூரில் பிறந்து உள்ளமெல்லாம் அன்னைத்தமிழ் நிறைத்த தமிழ்த்தென்றல் திரு.வி.கல்யாணசுந்தரனாரின் தமிழ்ப்பற்றையும் தமிழாற்றலையும் நினைவுகூரும் வகையில், கட்செவியில் தமிழன்பர் ஒருவர் எழுதிய செய்தியை இங்குப் பதிவுசெய்கிறேன்.

"இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ், செந்தமிழ், நற்றமிழ், வண்டமிழ், ஒண்டமிழ் என்று எத்தனையோ தமிழை அறிந்துள்ளோம். அது என்ன திரு.வி.க.தமிழ்? இன்று அதை அறிந்து கொள்வோம்.

திருவாரூர் விருத்தாலம் கல்யாணசுந்தரம் என்பதைச் சுருக்கியே திரு.வி.க. என்று அழைத்து மகிழ்கிறது தமிழுலகம். தமிழின்பால் ஈடுபாடு கொண்டு தமிழின் வளர்ச்சிக்காகத் தன் வாழ்நாள் முழுவதையும் செலவிட்டவர்.

1912 ஆம் ஆண்டு கமலாம்பிகை என்னும் நங்கையை வாழ்க்கைத் துணையாக ஏற்றார் திரு.வி.க. இவர்களின் இல்லற வாழ்வின் சான்றாக இரு பிள்ளைகள் பிறந்தனர். திருமணம் ஆன ஆறு ஆண்டுகளுக்குள் ( 1918 ) தன் மனைவியையும், தன் இரு பிள்ளைகளையும் நோயால் பறிகொடுத்தார்.

அவர் தனிமரமாய் நிற்பதைக் கண்டு கவலையுற்றனர் திரு.வி.க. வின் நண்பர்கள். "நீ தனியாக இருந்து துன்பப்பட வேண்டாம். மறுமணம் செய்துகொள். உனக்கென்று ஒரு துணை வேண்டுமல்லவா " என்று நண்பர்கள் அறிவுறுத்தினார்கள்.

அதற்குத் திரு.வி.க . என்ன சொன்னார் தெரியுமா? " நான் தனியாக வாழவில்லை. தமிழோடு வாழ்கிறேன் " என்றார். ஆம். இன்றுவரை திரு.வி.க. தமிழோடுதான் வாழ்கிறார். தமிழ் உள்ளவரை அவர் வாழ்வார்.

"எங்கும் தமிழ், எதிலும் தமிழ் " என்பதை முழுமூச்சாய்க் கொண்டார். வடமொழி கலவாமல் பேசவும், எழுதவும் செய்தார். சென்னை மகாஜன சங்கக் கூட்டத்தில் " இனி எங்கும் எவரும் தமிழிலேயே பேச வேண்டும் " என்ற தீர்மானத்தைக் கொண்டு வந்தார். காந்தியடிகள் தமிழகம் வந்த போதெல்லாம் அவரின் மேடைப்பேச்சை மொழிபெயர்த்து காந்தியடிகளிடம் பாராட்டுப் பெற்றார். மகாத்மா காந்திக்கு அழகுத் தமிழில் " காந்தியடிகள் " என்று பெயர் சூட்டி அழைத்தது திரு.வி.க.தான்.

"திரு.வி.க. நடை " என்ற ஒரு தனி நடையை நடைமுறைப்படுத்தினார். எல்லோர்க்கும் எழுத்து நடை வேறு. பேச்சு நடை வேறு. இந்த இருவேறு நடையையும் ஒன்றாக்கிப் புதியதோர் நடை படைத்தார். " பேசுவது போலவே எழுதுவது. எழுதுவது போலவே பேசுவது " இதுதான் திரு.வி.க.வின் தனிநடை ஆகும். இந்தப் புதுவகை நடையையே " திரு.வி.க. தமிழ் " என்று போற்றியது தமிழுலகம். அறிஞர் அண்ணா உள்ளிட்ட அக்கால இளைஞர்களை எல்லாம் மேடையேறத் தூண்டியது "திரு.வி.க.தமிழ் "

எளிமையின் எடுத்துக்காட்டாய் வாழ்ந்தவர் திரு.வி.க. சொந்த வீடு கிடையாது. செருப்பு கூட அணியமாட்டார். எளிய தூய கதர் ஆடையையே எப்போதும் உடுத்துவார். இவருடைய வழித்தோன்றலாகக் கல்கியும், மு.வரதராசனாரும் ( மு.வ. ) தோன்றினர். இவர்மீது கொண்ட பற்றின் காரணமாகத் தன் பெயரைக் கல்கி என்று மாற்றிக் கொண்டார் இரா.கிருஷ்ண மூர்த்தி. திரு.வி.கல்யாண சுந்தரனார் என்னும் பெயரின் முதல் இரண்டெழுத்துடன் ( கல்) தன் பெயரின் ( கிருஷ்ண மூர்த்தி) முதல் எழுத்தையும் ( கி) சேர்த்து ( கல் + கி) "கல்கி " என்ற புனைபெயரை உருவாக்கினார் இரா. கிருஷ்ண மூர்த்தி.

"மகாகவி " பாரதியிடம் இருந்து "பாவேந்தர் " பாரதிதாசன் தோன்றியது போல திரு.வி.க . விடமிருந்து தோன்றியவர்தான் கல்கி. " பொன்னியின் செல்வன் " என்னும் புகழ்பெற்ற புதினத்தைப் படைத்து அழியாப் புகழ் பெற்றார் கல்கி. தமிழுலகம் உள்ளவரை "திரு.வி.க.தமிழ் " தமிழர் நெஞ்சத்தைத் தென்றலாய் வருடிக் கொண்டிருக்கும். ஆம். திரு.வி.க தான் " தமிழ்த்தென்றல் " ஆயிற்றே."

பிறமொழிக் கலவாமல் தூயதமிழில் பேசுவதும் எழுதுவதுமே தமிழ்த்தென்றல் திரு.வி.க. போன்ற தமிழ்ச்சான்றோர்க்கு நாம் செய்யும் நன்றியறிதலும் போற்றுதலுமாகும்.

# திருக்குறளில் இயைபுத் தொடை

புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை



## முன்னுரை

இயைபு என்பது ஒன்றுவதாகும். அஃதாவது இறுதி ஒன்றுவது. இறுதி ஒன்றுவது எனில் – இறுதிச்சீர் ஒன்றுவதாகும். அல்லது இறுதி எழுத்து ஒன்றுவதாகும். இதனுடன் சிலர் ஒலி ஒன்றுவதுமாகும் என்று உரைப்போரும் உளர்.

செய்யுளின் – ஓரடியில் அமைந்துள்ள நான்கு சீர்களுள் இறுதி நான்காவது சீரோ – எழுத்தோ – ஒலியோ ஒன்றி அமையுமானால் அதனை இயைபுத் தொடை என்பர்.

## இயைபுத் தொடை

இயைபுத் தொடையினைக் கொள்ளும்போது ஓரடியின் முதற்சீலிரிருந்து கொள்ளுதல் கூடாது. இயைபுத் தொடையினுக்கு மட்டும் அடியின் இறுதிச்சீரினை அஃதாவது நான்காவது சீரினை – முதற்சீராகக் கொண்டு காணுதல் வேண்டும்.

இயைபுத் தொடை – சந்தப் பாடலுக்கு மிக மிக இன்றியமையாததாகும். மற்ற செய்யுள்களுக்கும் பாடல்களுக்கும் இயைபுத் தொடை இனிமையைச் சேர்ப்பதாகும்.

இயைபுத் தொடை – 1. அடி இயைபு ; 2. இணை இயைபு ; 3. பொழிப்பு இயைபு ; 4. ஒரூஉ இயைபு ; 5. கூழை இயைபு ; 6. மேற்கதுவாய் இயைபு ; 7. கீழ்க்கதுவாய் இயைபு; 8. முற்று இயைபு என எட்டு விகற்பத் (மாறுபட்ட) தொடைகளைக் கொண்டுள்ளது.

### 1. அடி இயைபுத் தொடை

அடி இயைபுத் தொடை என்பது – ஒவ்வோர் அடியின் இறுதிச் சீரும் இயைபாக ஒன்றிவரத் தொடுப்பதாகும்.

எ.டு. :

தாய்மொழித் தமிழே தாங்கிடும் உயிராம்

சேய்மொழி அனைத்துஞ் செழித்திடும் பயிராம்

காய்கனி உண்பதே வயிறாம்

தூய்மையாய் வெண்மையில் துலங்கலெ
யிறாமே! (வெற்றி.)

மேலே காட்டப்பெற்றுள்ள நேரிசை ஆசிரியப்பாவின் ஒவ்வோர் அடியிலும் உயிராம், பயிராம், வயிறாம், எயிறாமே என்று நான்கு அடிகளிலும் முதற்சீர் இயைபினில் அமைந்திருப்பதனால், இஃது அடி இயைபுத் தொடையாகும்.

## திருக்குறளில் இயைபுத் தொடை

இதுவரையில் – பொதுவான செய்யுள்களில் இயைபுத் தொடையினைக் கண்டோம். இனித் திருக்குறளில் திருவள்ளுவர் இயைபுத் தொடையினை எவ்வாறு பயன்படுத்தியுள்ளார், எத்தனை குறள்களில் பயன்படுத்தியுள்ளார் என்பதனைப் பார்ப்போமாக.

அடி இயைபுத் தொடையினை மேலே கண்டோம். திருக்குறளில் முதலடி மட்டுமே நாற்சீர்களால் அமைந்திருக்கும் ; இரண்டாவது அடி முச்சீரால் அமைந்திருக்கும். முச்சீரிலும் இறுதிச்சீர் – சீர் என்ற பெயரில் நேரசை, நிரையசையாகவே அமைந்திருக்கும். அவற்றுள் இயைபுச் சீரினைக் காணுதல் இயலாது. அதனால் திருக்குறளில் அடி இயைபுத் தொடையினைக் காண இயலாது.

### 1. இணை இயைபுத் தொடை

இணை இயைபுத் தொடை என்பது – நான்கு சீர்களைக் கொண்ட அடியினது இறுதிச் சீராகிய முதற் சீரிலும் – இறுதிச் சீர்க்கு முன் சீரிலும் சீர்முழுவதும் ஒன்றி அமைந்திருப்பினும் – சீரினது இறுதி எழுத்து ஒன்றி இருப்பினும் இணை இயைபுத் தொடையாகக் கொள்ளுதல் வேண்டும்.

எ.டு. : முதன்மொழி என்பது தமிழே! தமிழே!

## திருக்குறளில் இணை இயைபுத் தொடை

திருக்குறளில் – பேராசான் திருவள்ளுவர் இணை இயைபுத் தொடையினை அமைத்திருக்கின்ற நிலையினைப் பார்ப்போமாக.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் (10)

செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் (26)

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம் (138)

நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும் (375)

பகையகத்துச் சாவார் எளியர் அரியர் (723)

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக (882)

நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும் (959)

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை (978)

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன் (1133)

யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத்(து) எம்நெஞ்சத்(து) (1204)

பத்துக் குறள்கள் மட்டுமே இணை இயைபுத் தொடைக்கு ஏற்றவாறு அமைந்திருக்கின்றன.

## 2. பொழிப்பு இயைபுத் தொடை

பொழிப்பு இயைபு என்பது – நான்கு சீர்களைக் கொண்ட ஓரடியினது – இறுதிச் சீராகிய முதற்சீரிலும் – இறுதியிலிருந்து மூன்றாவது சீரிலும் இயைபு அமைந்திருத்தல் வேண்டும்.

எ.டு. : திருக்குறள் ஒன்றே தீந்தமிழ்க் குன்றே

## திருக்குறளில் பொழிப்பு இயைபுத் தொடை

தீந்தமிழ்ப் பேராசான் திருவள்ளுவர் – தமது திருக்குறளில் பொழிப்பு இயைபுத் தொடையினை எவ்வாறு அமைத்துள்ளார் ; எத்தனை குறள்களில் அமைத்துள்ளார் என்பதனைப் பார்ப்போமாக.

தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர் (201)

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல்
அச்சொல்லை (645)

நாடாது நட்டலின் கேடில்லை நட்டபின் (791)

காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும் (1164)

வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
1251)

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும் (1281)

பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும் (1295)

திருவள்ளுவர் ஏழு குறள்களில் பொழிப்பு இயைபுத் தொடையினை அமைத்துச் சுவை கூட்டியுள்ளார்.

## 3. ஒரூஉ இயைபுத் தொடை

ஒரூஉ இயைபு என்பது – நான்கு சீர்களைக் கொண்ட ஓரடியின் – இறுதிச் சீராகிய முதற்சீரிலும் – முதற்சீராகிய இறுதிச் சீரிலும் இயைபு அமைந்திருத்தலேயாகும்.

எ.டு. : வாழ்க்கை என்பது வள்ளுவ வாழ்க்கை

திருவள்ளுவர் தமது திருக்குறளில் வெள்ளமாக வாரி வழங்கியிருப்பது ஒரூஉ இயைபுத் தொடையேயாகும். இதனை நான்காவது சீரினை முதற்சீராகவும் – முதற்சீரினை இறுதி நான்காவது சீராகவும் கொண்டு பார்த்தால் – ஒரூஉ இயைபுத் தொடையாகும்.

முதற்சீரினை முதற்சீராகவும் – இறுதி நான்காவது சீரினை நான்காவது சீராகவும் கொண்டு பார்த்தால் ஒரூஉ எதுகையாக அமையும். இவ்வாறு பார்த்ததனால்தான் புலவர் து. அரங்கனார் தமது "திருக்குறளில் சில இலக்கணக் கூறுகள்" என்னும் நூலில் – "திருக்குறளில் இயைபுத் தொடை விகற்பங்கள், இரட்டைத் தொடை, செந்தொடை ஆகிய தொடை விகற்பங்கள் அமைந்த குறட்பாக்கள் ஒன்றுகூட இல்லை எனலாம்" என்று கூறியுள்ளார்.

## திருக்குறளில் ஒரூஉ இயைபுத் தொடை

திருவள்ளுவர் பெருமான் தாம் யாத்தளித்த வாழ்வியல் நெறி நூலாகிய திருக்குறளில் ஒரூஉ இயைபுத் தொடையினை எவ்வாறெல்லாம் அமைத்து அளித்துள்ளார் என்பதனைப் பார்ப்போமாக.

எதுகைத் தொடை என்பதற்குச் சீரினது முதலெழுத்தும் இரண்டாவது எழுத்து மட்டுமே பொருந்தி வந்தால் போதுமானது. ஆனால், இயைபுத் தொடைக்குச் சீரினது எல்லா எழுத்தும் பொருந்தி வருதல் வேண்டும். அல்லது சீரினது இறுதி எழுத்தாவது பொருந்தி வருதல் வேண்டும். அல்லது – ஓசை நயம் பொருந்தியிருத்தல் வேண்டும். அவ்வாறு அமைந்தவை மட்டுமே இங்கு எடுத்தாளப்பட்டுள்ளன. எதுகைக்கு மட்டும் பொருந்தியவற்றை எடுக்கவில்லை என்பது குறித்துக்கொள்ளத் தகுந்தது. எதுகைக்குப் பொருந்தியவை சிறுபான்மையே ; இயைபுக்குப்

பொருந்தியவை பெரும்பான்மை என்பதனையும் அறிந்துகொள்ளலாம்.

நெடுங்கடலுந் தன்நீர்மை குன்றுந் தடிந்தெழிலி (17)

ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து (21)

மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன் (34)

துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும் (42)

அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின்
புறத்தாற்றில் (46)

தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள் (63)

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பி (81)

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து (84)

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி (88)

அகனமர்ந்(து) ஈதலின் நன்றே முகனமர்ந்து (92)

முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம் (93)

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை (96)

நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று (97)

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும் (98)

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க (106)

கெடுவாக வையா(து) உலகம் நடுவாக (117)

செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து (123)

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித் (132)

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம் (133)

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின் (136)

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின் (137)

அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை (142)

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில் (143)

எனைத்துணையர் ஆயினும் என்னாம்

தினைத்துணையும் (144)

அறனியலான் இல்வாழ்வான் என்பான்
பிறனியலான் (147)

அறன்வரையான் அல்ல செயினும்
பிறன்வரையான் (150)

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள் (153)

நிறையுடைமை நீங்காமை வேண்டின்
பொறையுடைமை (154)

ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம்
பொறுத்தார்க்குப் (156)

அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம் (163)

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின் (164)

நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக் (171)

இலம்என்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற (174)

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான்
பொருள்வெஃகி (176)

அஃகாமை செல்வத்திற்கி யாதெனின் வெஃகாமை (178)

இறலீனும் எண்ணாது வெஃகில் விறலீனும் (180)

அறஞ்சொல்லும் நெஞ்சத்தான் அண்மை
புறஞ்சொல்லும் (185)

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி (187)

பயனில பல்லார்முன் சொல்லல் நயனில (192)

தொடரும்....

# தமிழின் ஏற்றத்திற்குப் பாவாணரின் பங்களிப்பு




**முனைவர் இரா.கு.ஆல்துரை**

தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்


### அறிவுப்புலம்

பாவாணர் சென்ற நூற்றாண்டில் தமிழின் ஏற்றத்திற்குப் பெரும் பங்களித்த சிறப்பாளர். அவர் தம் இளமைக் காலத்தில் ஆங்கிலத்தில் நல்ல தேர்ச்சிபெறவேண்டும் என்னும் வேட்கையோடு இருந்துள்ளார். அதுவும், உலக அளவில் ஆங்கிலத்தில் சிறப்புற்றிருக்கும் எருதந்துறைப் பல்கலைக் கழகத்தில் ஆங்கிலப் பேராசியராக விளங்க வேண்டும் என்பது அவர் விருப்பமாக இருந்துள்ளது. தம் பள்ளிப்பருவத்தில் ஆங்கில இலக்கிய மாணவர் மன்றச் செயலாளராகவும் ஆங்கிலப் பேச்சுப்போட்டிகளில் கலந்துகொள்பவராகவும் இந்துள்ளார். இளமை முதல் ஆங்கிலம் படிக்க வேண்டும் என்னும் விருப்பத்துடனே இருந்துள்ளதால், பின்னாளில் தம் ஆய்விற்குப் பெருமளவில் தரவுகளைத் தரத்தக்க ஆங்கில நூல்களை அவரால் எளிமையாகக் கையாள முடிந்துள்ளது எனல் வேண்டும். இயல்பாக, இளமையில் இசைப் பாக்களை இயற்றுவதிலும் இசைக்கருவிகளை மீட்டுவதிலும் ஆர்வம் கொண்டிருந்தார். தமிழ்ச் சங்கப் பண்டிதத் தேர்வில் வெற்றி பெற்ற பின் தமிழில் ஆழ மூழ்கி ஆய்வு நடத்தத் தொடங்கினார். தொடக்கக் காலத்தில் பாக்கள் இயற்றுவதிலே அவருக்கு ஈடுபாடு அதிகம். அவரது பா வன்மைக்காகக் கவிவாணர் என்ற பாராட்டுக் கிடைத்தது. உரைநடையில் அவரது ஆய்வுக் கட்டுரையாக முதலில் வந்தது மொழியாராய்ச்சி என்பதாகும். இக்கட்டுரை வெளிவரும் போது பாவாணரின் அகவை இருபத்தி ஒன்பது. அது தொடங்கி அவரது வாழ்நாள் இறுதிவரை ஐம்பது ஆண்டுக் காலத்தில் மொழியாய்வில் இடைவிடாது ஈடுபட்டிருந்தார். அதிலும் குறிப்பாக மொழியாராய்ச்சி, சொல்லாராய்ச்சி, குமரிக்கண்டக் கோட்பாட்டை நிறுவுவதற்குக் கொண்ட ஆராய்ச்சி என்பன போன்று தமிழ், தமிழர் நாகரிகம், தமிழ் வரலாறு, தமிழ்ப் பண்பாடு போன்றவற்றைப் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளையும் நூல்களையும் எழுதிக் குவித்துள்ளார்.

### ஞால முதன்மொழி

ஞால முதன்மொழிக் கொள்கை பாவாணர்தம் ஆய்விற்கு உறுதியான அடித்தளமாக விளங்கியது. இக்கொள்கையை நிலை நாட்டுவதற்கான வழிமுறைகளைக் கண்டறிவதிலேயே அவர்தம் ஆய்வு பெருமளவில் அமைந்திருப்பதைக் காணலாம். மொழி மிகச்சில ஒலிகளிலிருந்து வளர்ந்து வந்துள்ளது என்பதை அறிந்தவுடன் சுட்டடிகளிலிருந்து ஞால முதன் மொழி தோன்றி வளர்ந்து வளர்ந்திருப்பதைக் காட்டினார். சொல்லுக்கு வேர் மூலம் காண்பதிலும் மரபு வழியில் வடிவ மீட்டமைப்பதிலும் உலக மொழிகள் அனைத்துடன் ஒப்பிட்டு ஆராய்வதிலும் பாவாணர் ஆய்வு சிறந்து காணப்படுகிறது. தம் ஆய்வுகள் அனைத்தையும் உள்ளடக்கியதாகச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஒன்றினை உருவாக்க வேண்டும் என்னும் திட்டமிடலுடன் இருந்தார். அதனைத் தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருந்தார். பேரார்வத்துடன் தொடங்கிய அப்பணி நிறைவுறும் முன்னரே அவர் மறைந்து விட்டார்.

### மொழி மாற்றம்

பல்லாயிர ஆண்டுகளுக்கு முன் மொழி தோன்றியுள்ளது. மொழியில் மாற்றம் தொடர்ந்து இருந்து வருகிறது. மொழி வரலாற்றின் நீண்ட நெடுங்காலத்தில் மொழிகளுக்கு இடையே நிலவி வந்த உறவுகள் பல அடையாளம் காணவியலாத அளவிற்கு மறைந்து போயுள்ளன. ஒரே மொழியிலும் எத்தனையோ இணைப்புப் பகுதிகள் மறைந்து போயுள்ளன. இவ்வாறு இருக்கும்போது பழங்காலத்தில் மொழிகளுக்கு இடையே நிலவி வந்த உறவை நிலை நாட்டுவது என்பது அவ்வளவு எளிதான பணியன்று. இருந்தாலும் பாவாணர் கடுமையான முயற்சி மேற்கொண்டு வேர்ச்சொல் ஆய்வின் மூலம் பழைய உறவுகள் பலவற்றை மீட்டமைத்துள்ளார். பெரும்பான்மையான பாவாணர் படைப்புகள் தமிழில் புலமை பெற்றோருக்கு உதவுவனவாக இருக்கின்றன என்பது கவனிக்கத்தக்கது. அதாவது, அவர் ஆய்வுகள் உயர் ஆய்வுகளாக இருக்கின்றன. உண்மையில் பாவாணர்தம் ஆய்வுகளை உள்வாங்கிக் கொள்வதற்கு மொழியியல், சொல்லியல் போன்றவற்றில் ஓரளவிற்கேனும் பயிற்சி பெற்றிருக்க வேண்டும். பாவாணர் ஒரு புறத்தில் மரபிலக்கணத்தில் நல்ல அடித்தளத்தோடு இருந்தார். மறுபுறம் மொழிநூல், சொல்லியல் போன்ற துறைகளிலும் பயிற்சி உள்ளவராகத் தம்மை வளர்த்துக் கொண்டுள்ளார். இவர் தமிழில் திரிபும் கொச்சையுமாக உள்ள சொல்லாட்சிகளைச் செந்தமிழ் வடிவத்திற்கு மீட்டமைத்து வழங்க வேண்டும் என விருப்பமுடையவர். அவ்வகையில் பல திரிபுகளுக்கும் கொச்சை வடிவங்களுக்கும் செந்தமிழ் வடிவம் கொடுத்துள்ளார். பாவாணரின் மரபார்ந்த ஆய்வு ஒரு சீரான இலக்கண நெறியில் தமிழ் சொற்கள் வளர்ச்சி

பெற்று இருப்பதைக் காட்டுகின்றன. மேனாட்டு அறிஞர்கள் கால்டுவெல் கண்காணியாரின் தென்னாட்டு மொழிகளின் அல்லது திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் பாவாணரைப் பெரிதும் கவர்ந்தது. 'கால்டுவெல் கண்காணியாரின் கடுஞ் சறுக்கல்கள்' என்று கால்டுவெல்லின் ஆய்வுக் குறைபாடுகளைச் சுட்டியிருந்தாலும் 'கால்டுவெல்லின் காட்சி உரைகள்' என்று அவர்தம் ஆய்வுகளைப் பெரிதும் போற்றியுள்ளார். கால்டுவெல்லின் ஆய்வு பாவாணர் ஆய்வுக்குப் பெரிதும் ஊக்கம் அளித்துள்ளது. கால்டுவெல்லின் ஒப்பிலக்கணப் பகுதிகள் பலவற்றைத் தமிழில் மொழி பெயர்த்துத் தம் நூல்களிலும் கட்டுரைகளிலும் ஆண்டுள்ளார். மனம் திறந்து பாராட்டியும் உள்ளார். அதுபோல் மொழிநூல் தந்தை மாக்கசுமுல்லரின் ஆய்வைப் பரவலாக எடுத்தாண்டு உள்ளார். அதாவது, தம் ஆய்வுக்கு உதவும் மேனாட்டார் ஆய்வு நூல்களைப் பயன்படுத்தி அதன் வழி தமிழியலை விளக்கியுள்ளதால் இவர்தம் ஆய்வு சிறப்புற விளங்குகிறது.

### ஒப்பீட்டு மொழியியல்

மொழியியலில் ஒப்பீட்டுமொழியியல் என்ற ஒரு புதிய பிரிவுப் பாடம் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில் மேலைநாட்டறிஞர்களிடையே வளர்ந்து வந்தது. மொழிகளை ஒன்றுடன் மற்றொன்றை ஒப்பிடுவதன் மூலம் ஒரு மொழியின் நிறைகுறைகளைக் காண இயலும் எனக் காட்டினர். மொழிகளை ஒப்பிடும் வகையே உலக மொழிகளைக் குடும்ப மொழிகளாகக் கொண்டு விளக்கும் நிலையைத் தந்தது. இத்துறையில் பாவாணரின் கவனம் பெருமளவில் சென்றது. அவ்வகையில் ஒப்பியன் மொழிநூல் என்னும் நூல் படைக்கும் அளவிற்குச் சென்றதைக் காண்கிறோம். ஒப்பீட்டு மொழியியலில் கவனம் கொள்வதன் தேவை குறித்துத் திராவிடமொழிகளுக்கு ஒப்பிலக்கணம் வரைந்த கால்டுவெல் பெருமகனார் குறித்துள்ளார். அதனை மொழிபெயர்த்துத் தம் நூலில் போட்டுத் தம் ஒப்பீட்டு மொழியில் உள்ளக்கிடக்கையைப் பாவாணர் காட்டியுள்ளார். "அவர்கள் (திராவிடர்) தங்கள் மொழிகளைப் பிறவற்றுடன் ஒப்புநோக்க ஒருபோதும் முயன்றதில்லை; தங்கள் மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த பிற மொழிகளுடன் கூட ஒப்பு நோக்கியதில்லை. மொழிக் குடும்பம் என ஒன்றுண்டு என்னும் கருத்தைக்கூட அவர்கள் மனம் பற்றியதில்லை. இதனால் அவர்கள் தங்கள் மொழியைப் படிப்பதில் எடுத்துக்கொண்ட அக்கறையானது மதிநுட்பத்தோடு பகுத்துணர்வோடும் கூடியதாயிராமல், நேர்மையாக எதிர்பார்த்த அளவிற்கு மிகக் குறைவான பயனை விளை வித்துள்ளது. அவர்கள் மொழிநூல், அப் பெயராற் குறிக்கப்படக் கூடுமாயின், நம் காலம் வரையும், ஊழிகட்கு முன்னிருந்தவாறே தொடக்க நிலையிலும் துண்டு துணிக்கையாகவும் இருந்து வந்திருக்கின்றது. ஒப்பியல் தன்மையில்லாமையால் அது அறிவியல்திறமும் முன்னேற்றமும் அடையவில்லை. ஒப்பியற் கல்வி ஒவ்வோர் அறிவியல் துறையிலும் ஐரோப்பாவில் பெருநலம் பயத்திருக்கின்றது. இந்தியா விற்கும் அது பெரிதுதவும் என்று எதிர்பார்க்கக்கூடாதா? தென்னிந்திய மக்கள், தங்கள் சொந்த மொழிகளை ஒப்புநோக்கிப் படிப்பதிலும் பொதுவாக ஒப்பியல் மொழி நூலிலும் விருப்பங் கொள்வாராயின் அது, அவர்களின் தனி யிலக்கணக் கல்வி இதுவரை படன்பட்டதைவிட மிகமிகப் பல்வேறு வகைகளிற் பயன்படும் என்பதைக் காண்பார்கள். அவர்கள் செய்யுள் நடைப்பட்ட பிதிர்களையும் இன்னோசைப்பட்ட வெற்றெனத் தொடுப்புகளையும் உருப்போட்டுப் படித்துப் பொந்திகை (திருப்தி) கொள்வதை விட்டுவிடுவார்கள்" (பாவாணர், மொழிநூற்கட்டுரைகள், பக்.1).

### மொழிக்கடன்

பாவாணர் என்ற பெயரே பாவாணரது தமிழ்ப் பற்றையும் தனித்தமிழ் உணர்வையும் காட்டி நிற்கிறது. அவரது பா இயற்றும் திறனுக்காக அவரது ஆசிரியரால் வழங்கப்பட்ட பெயர் கவிவாணர். கவி என்பதைத் தமிழ்ப்படுத்தி பாவாணர் எனத் தம் பெயரை மாற்றிக் கொண்டார். அதேபோல் தேவநேசன் என்னும் பெயரைத் தேவநேயன் என மாற்றிக் கொண்டுள்ளதைக் காண்கிறோம். இவை அவரது தமிழ் ஆர்வத்தைக் காட்டுகின்றன. இதைத் தாண்டி, இச்சூழல் அவர்தம் காலம் வரை இருந்த தமிழ் ஆய்வு மனநிலையைக் காட்டுவதாகவும் இருக்கிறது. ஒரு சொல் தமிழிலும் சமற்கிருதத்திலும் இருக்கிறது என்றால் உடனே அச்சொல் சமற்கிருதம் எனக் கூறும் மனநிலை நீண்ட காலமாக இருந்து வந்துள்ளது. இந்த மனப்போக்கை முழுவதும் மாற்ற உதவியது பாவாணரின் ஆய்வுகள்தாம் என்று ஆணித்தரமாகச் சொல்லலாம். சமற்கிருதம் தமிழ்ச்சொற்கள் பலவற்றைக் கடன்கொண்டுள்ளது; சிலவற்றை சிறிதளவு மாற்றிக் கொண்டுள்ளது; இன்னும் சிலவற்றை மொழிபெயர்த்துக் கொண்டுள்ளது.

இவைபோன்றவற்றை விளக்கிக் காட்டுவனவாக இவர்தம் ஆய்வுகள் விளங்குகின்றன. குறிப்பாக வடமொழி வரலாறு என்னும் நூல் சமற்கிருதம் தமிழினின்று கடன்கொண்ட சொற்கள் பலவற்றை வரிசைப்படுத்திக் காட்டுகிறது.

### மொழித்தூய்மை

தமிழ் என்பது அவரைப் பொறுத்தவரையில் தனித்தமிழ் தான். அவரது கருத்து "தமிழை முன்னோர் செந்தமிழாகவும் தனித்தமிழாகவும் வளர்த்தனர், அங்ஙனமே இனி மேலும் வளர்க்க வேண்டும். வளர்ப்பு முறை தமிழுக்கும் பிற மொழிகளுக்கும் வேறுபட்டதாகும். பிறமொழிகளில் கொடு வழக்குகள் எல்லாம் செவ்வழக்காகும். தமிழிலோ கொடு வழக்குகள் கொள்ளப்படாது, என்றும் செந்தமிழே கொள்ளப்படும்" என்று அவர் குறிப்பிட்டிருப்பது கவனிக்கத்தக்கது இக்கோட்பாட்டிற் கேற்ப தம் வாழ்நாள்

முழுமையும் தனித்தமிழ் திறத்தைப் பேச்சிலும் எழுத்திலும் காட்டி வந்துள்ளார். எவ்வெவ் வகையிலெல்லாம் இக்கோட்பாட்டுக்கு உதவ முடியுமோ அவ்வவ் வகையில் ஆராய்ந்து உரிய வழிவகை கொடுத்தார். இவருக்குத் தமிழில் புகுந்துள்ள அயற்சொற்கள் அனைத்தும் தேவையற்றவனாகவும் வலியப் புகுத்தப் பெற்றனவாகவும் பட்டுள்ளன.

### படைப்புகள்

பாவாணரது படைப்புகளை மேற்கோக்காக 1.) தமிழின் நலங்களை எடுத்துரைப்பவை, 2.) தமிழை ஞால முதன் மொழி என நிறுவுவதற்கு எழுந்தவை, 3.) தனித்தமிழ் பேண வேண்டும் என வலியுறுத்துபவை என மூவகைப் படுத்தலாம். இம் முக்கூறுகளை விளக்க அவர் தனித்தனியாக நூல்கள் வரையவில்லை. சில கட்டுரைகள் இக்கூறுகளில் ஏதாவது ஒன்றை விளக்குவனவாக இருக்கின்றன. என்றாலும் இம் மூவகைகளை அவர்தம் ஒவ்வொரு படைப்பிலும் காணலாம். இப்பிரிவுகளுள் ஒன்றனை ஒன்று சார்ந்து இருக்கின்றன. இப்பிரிவுகளுள் ஒன்றனை விளக்கினால் மற்றக் கூறுகளும் விளக்கம் பெறுவனவாக இருக்கும். பாவாணர் படைப்புகளை மொழிநூல் ஆய்வு வகையில் அமைந்தன, சொல்லாய்வுத் தொடர்பானவை, வாழ்வியல் தொடர்பானவை, உரையும் பாட்டும் வகையைச் சார்ந்தனவென்று நான்கு வகைகளாகப் பிரிக்கிறார் இளங்குமரன் அவர்கள். இவரது பகுப்பின்படி மொழிநூல் ஆய்வு வகையில் அமைந்தன ஒப்பியன் மொழிநூல், முதற்றாய்மொழி, திரவிடத் தாய், வண்ணனை மொழிநூலின் வழுவியல், சுட்டு விளக்கம் ஆகியனவாகும். சொல்லாய்வு வழிபட்டன சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், வேர்ச்சொல் கட்டுரைகள், வடமொழி வரலாறு, சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியின் சீர்கேடு, இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும் என்பனவாகும். வாழ்வியல் வழிப்பட்டன தமிழர் திருமணம், தமிழ்நாட்டு விளையாட்டுகள், தமிழர் பண்பாடும் நாகரிகமும், தமிழர் வரலாறு, தமிழர் மதம், மண்ணில் விண் அல்லது வள்ளுவர் கூட்டுடமை, தமிழ் இலக்கிய வரலாறு, திருக்குறள் மரபுரையும் பல்வேறு சமயங்களில் பாடிய பாடல்களும் உரையும் பாட்டும் வகையைச் சார்ந்தன. கட்டுரை வரைவியல், உயர்தர கட்டுரை இலக்கணம் (இரண்டு பாகங்கள்) செந்தமிழ்க் காஞ்சி, இயற்றமிழ் இலக்கணம் ஆகியனவும் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளும் இந்த நான்கு வகைகளில் அடங்கும்.

### தொகுப்புக் கலை

சொல்லாய்வுக்குச் சொற்களைத் தொகுக்கும் பணி இன்றியமையாதது. அதன் பின் வகைப்படுத்தும் பணி இரண்டாம் இடத்தைப் பிடிக்கிறது. அவ்வகையில் ஒரு பொருள் பன்மொழிகள், பல பொருள் ஒரு சொற்கள், அணியியற் சொற்கள், இணைமொழிகள் (words in pairs), மெய்ப்பொருள் சொற்கள், தொடர்மொழிகள் (idiomatic phrases and expressions) என்றாற் போன்று சொற்களைத் தொகுத்து வழங்கியமையாலேயே மொழியின் தன்மைகளைப் பாவாணரால் விளக்க முடிந்தது. அதேபோல் பழமொழிகள், இடவழக்கு, வட்டார வழக்கு போன்ற வழக்குகளைத் தொகுப்பது என முற்றிலுமாகத் தொகுப்பு பணியில் முழு மனத்துடன் பாவாணர் ஈடுபட்டார். அதனாலயே பாவாணர் படைப்புகள் தொகுப்புப் பணியிலும் சிறந்து காணப்படுகின்றன. அதைப்போல் உரியவாறு வகைப்படுத்தி விளக்கம் கொடுப்பதிலும் சிறந்து காணப்படுகின்றன. செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பிலும் தம் இறுதிக் காலம் வரை ஈடுபட்டிருந்தார். பாவாணர் தமிழ்நாட்டின் பல இடங்களில் பணியின் பொருட்டும் வேறு காரணம் பற்றியும் வாழ நேரிட்டதால் அனைத்து வழக்குகளையும் தொகுக்க முடிந்தது என்பர். எவ்வாறாயினும் வழக்குச் சொல்லாட்சிகளுக்குத் தமிழ்நாட்டின் பல இடங்களில் பணி செய்தமை காரணமாக இருக்கலாம். ஆனால் அவரது தொகுப்பு இலக்கிய சொற்களையும் உள்ளடக்கிக் காணப்படுகின்றது. மெய்ப்பொருள் சொற்கள், வரலாற்றுச் சொற்கள், ஒழுக்கவியற் சொற்கள் என்றாற் போன்று இலக்கியச் சொற்களும் அவர் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. ஆகையால் தமிழ் வழக்குகளை அறிவதுடன் இலக்கிய இலக்கணப் புலமை, மொழிநூல் அறிவு, அறிவுக் கூர்மை, இடைவிடா முயற்சி போன்ற காரணங்களால் அவரால் பல படைப்புகளைக் கொண்டுவர முடிந்தது என்று சொல்லுதலே தகும்.

### பயன்பாடு

தமிழின் சொல் வளத்தை உலகிற்குக் காட்டற் பொருட்டும், தனித்தமிழில் பேசவும் எழுதவும் விரும்புவோர்க்குப் பயன்படற் பொருட்டும் என இரு வகையில் பாவாணரின் படைப்புகள் பயன்படுகின்றன. பொதுவாக, மீட்டுருவாக்கம் என்பதை ஒரு குடும்பமொழிகள் என்ற வரையறைக்குள் அடக்கிக் கொள்கின்றனர் மொழியியலாளர்கள். அதைப்போல் ஒப்பியன்மொழிநூல் என்பதனையும் ஒரு குடும்ப மொழிகளுக்கிடையில் வைத்துக்கொள்கின்றனர். ஆனால் பாவாணர் ஆய்வு தமிழியக் குடும்ப மொழிகளைத்தாண்டி இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்ப மொழியான சமற்கிருதத்துடன் ஒப்பிட்டு ஆராய்ந்துள்ள சிறப்புக்குரியது. அதன் வழி கிரேக்கம், இலத்தீனம் போன்ற மொழிகளுடனும் ஒப்புமைப் படுத்தியுள்ளார். குடும்ப மொழியினைத் தாண்டி வேற்றுக் குடும்ப மொழிகளுடனும் ஒப்பிடும் வல்லமை உலக அளவில் ஒரு சில அறிஞர்கள்தாம் கொண்டிருந்தனர். அந்த ஒரு சில அறிஞர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவராகப் பாவாணர் சிறப்புற்றிருக்கிறார். பாவாணரால் தமிழ் பெற்றுள்ள ஏற்றத்தினைப் பலரும் உணர்ந்துள்ளனர். வரும் நாள்களில் தமிழுலகம் பாவாணரின் பங்களிப்பை முழுமையாக உள்வாங்கிக் கொள்ளும் என நம்பலாம்.

# கல்லும் காலனலும்

இரா. திருமாவளவன்
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா



படைத்துறை தலைமைக் கட்டளை அதிகாரியை ஆங்கிலத்தில் காலனல் அல்லது கேர்னல் என்று கூறுவர். படைத்துறை சார்ந்த பொறுப்புகளுக்குத் தமிழில் சொல்லமைக்க ஆய்வு செய்து கொண்டிருக்கையில் காலனல் எனுஞ் சொல் தமிழோடு தொடர்புடையதாய் இருப்பதை அறிந்து பெரிதும் மகிழ்ந்தேன்.

காலனல் காரனல் எனும் இரண்டுக்கும் லகர ரகர வேறுபாடு ஏற்பட்டுள்ளது. இதனைத் திரிபு என்றும் போலி என்றும் நம் இலக்கணத்தில் கூறுவர்.

இச்சொல் படைத்தொகுதியின் கட்டளைத் தலைமையரைக் குறித்துச் சொல்லப்படுவதாய் விளக்கம் வழங்கியிருந்தனர். இச்சொல் இலத்தின் மொழியின் கொலும்னா columna எனும் சொல்லிலிருந்து மருவியுள்ளது. கொலும்னா எனில் தூண் pillar எனப் பொருள். உயர்ந்து அமைந்துள்ள  கற்றூண் எனவும் கூறுகின்றனர். அஃதாவது மேல் என்றும் உச்சி, முகடு என்றும் இதற்கு விரிவிளக்கம் தரப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் இதற்கான வேர் கெல் kel என்பதாகும். இதன் பொருள் மலை , முற்படுதல் ; ஓங்கி நிற்றல் என்பதாகும்.

இந்தோ ஐரோப்பிய மொழிகளில் கீழ்க்காணும் சொற்கள் அனைத்திற்கும் இந்தக் கெல் என்பதே மூலமாக அமைந்துள்ளது என்பதும் விளக்கப்பட்டுள்ளது.

**colonel**; **colonnade**; **colophon**; **column**; **culminate**; **culmination**; **excel**; **excellence**; **excellent**; **excelsior**; **hill**; **holm**.

மேலும்,

Collis ( மலை) columna ( முற்படுதல்) , cellere ( எழுச்சி) , kolonos - gr. ( மலை) , kolophon (உச்சி) ; kalnas - Li. ( மலை) , kalnelis ( மலை) , kelti ( ஓங்கி முற்படல்) ; hyll. O.E ( மலை) ; hallr- O.N ( கல்) ; hallus- Gt. ( பாறை)

என இந்தோ ஐரோப்பிய மொழிகளில் இச்சொல் மலை , பாறை, கல் என வழங்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

**kel**- To be prominent; hill. 1. Zero-grade form *k/-.

a. HILL, from Old English hyll, hill, from suffixed Ger- manic form hul-ni-b. HOLM, from Old Norse hõlmr, islet in a bay, meadow, from suffixed Germanic

form *hul-maz. 2. Suffixed form "kel-d-, EXCEL, from Latin excellere, to raise up, elevate, also to be eminent (ex-, up out of; see eghs). 3. O-grade form *kol-, a. COLO- PHON, from Greek kolophon, summit; b. suffixed form *kol(u)men-. CULMINATE, from Latin culmen, top, summit; c. extended and suffixed form *kol- umna COLONEL, COLONNADE, COLONNETTE, COLUMN, from Latin columna, a projecting object, column. [Pokorny 1. kel-544.]

என, திரு கல்வர்த்து வாட்கிங்சு என்பார் தொகுத்த dictionary of Indo Europe Roots - இந்தோ ஐரோப்பிய வேர்கள் எனும் அகரமுதலியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மேலும் இதன் விரிவைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிடலாம்.

| **Family/Language / மொழிக்குடும்பம்** | **Reflex(es) சொல்** | **Gloss பொருள்** |
|---|---|---|
| **English** | | |
| Old English: | holm | holm, hill, mount; sea, wave, மலை, உயரலை |
| | hyll | hill, மலை |
| Middle English: | columne | column உயர் பிரிவு |
| | excellen | to excel, உயர் புகழ் |
| | hill | hill மலை |
| | holm | holm |
| English: | colonel | commissioned officer ranking between lieutenant colonel/brigadier general உயர் படை அதிகாரி |
| | colonnade | columns at regular intervals, usu. supporting roof , உயர் கூரை தாங்கி |
| | colonnette | small (usu. decorative) column, சிறு |
| | colophon | inscription at end of book/manuscript, பனுவல் |
| | column | supporting pillar, தூண் |
| | coronel | colonel |

| | | |
|---|---|---|
| | culminate | to reach highest altitude |
| | excel | to outdo, surpass |
| | Hill | Bombadil's home in Tolkien: The Lord of the Rings |
| | hill | natural land elevation (lower than mountain) |
| | holm | small inland/inshore island |
| | Overhill | Shire village in Tolkien: The Lord of the Rings |
| | Underhill | Hobbiton family in Tolkien: The Lord of the Rings |
| **West Germanic** | | |
| Frisian: | hel | hill |
| Middle Dutch: | hul, hil(le) | Hill |
| Low German: | hul | hill |
| **North Germanic** | | |
| Old Norse: | hōlmr | holm |
| **East Germanic** | | |
| Crimean Gothic: | *al, ael | rock, stone |
| **Italic** | | |
| Latin: | *-cellere* | to rise, project |
| | *collis* | hill |
| | *colophon* | summit, finishing touch |
| | *columen* | top |
| | *columna* | column, pillar |
| | *culmen*, *culminis* | top |
| | *culmino*, *culminare*, *culminavi*, *culminatus* | to crown |
| | *excello*, *excellere* | to excel, rise out |
| Middle French: | colomne | column |
| | coronel | leader of column of soldiers |
| French: | colonnade | colonnade |
| Old Italian: | colonna | column, pillar |

| | | |
|---|---|---|
| | colonnello | colonel, column of soldiers |
| Italian: | colonnato | colonnade |
| **Baltic** | | |
| Lithuanian: | kálnas | hill, mound |
| | keliù, kélti | to lift, raise |
| | kìlti, kỹla, kìlo | to arise |
| **Hellenic** | | |
| Greek: | kolophōn | summit, finishing touch |
| | κολωνός | heap |

இவை அனைத்திற்கும் மூலமாய் தமிழின் ஒரே ஒரு வேர்ச்சொல் தான். ஆம் அதுவே கல் எனும் அருந்தமிழ்ச் சொல்லாகும்.

தமிழ் இலக்கியங்களில் கல்லின் பயன்பாடு கீழ்க்கண்டவாறு பயின்றுள்ளது.

கல் (பெ) I. பாறாங்கல்: ''உலைக் கல் அன்ன பாறை ஏறி" (குறு:12:2),
2. குண்டுக் கல்: "கல் பிறங்கு அத்தம்"' (குறு:66:2).
3. மலை: "அருவிக் கல் உயர் நண்ணியதுவே" (குறு:235:2,3).
4. கட்டி: “கடு வெயில் கொதித்த கல் விளை உப்பு" (நற்:304:8).
5. பாறையின் சிறு துண்டு: "சிறு காரோடன் பயினொடு சேர்த்திய கல் போல்" (அக:1:5:6).
6. கல் தரை: ''கல்லுறுத்து இயற்றிய வல் உவர்ப் படுவில் (அக:79:3).
7. அடைகல்: "உலைக் கல் அன்ன வல்லாளன்னே (புற:170:17).
8.அணைக் கல்: "வருவிசைப் புனலைக் கல் சிறை போல ஒருவன் தாங்கிய பெருமை யானும்" (தொல்:20:7).
9. நங்குரக் கல்: “கடுங்காற்று எடுப்பக் கல் பொருது உரை இ நெடுஞ் சுழிப்பட்ட நாவாய் போல" (மது:378,379).
10. நடுகல்: “கல் எறிந்து எழுதிய நல் அரை மராஅத்த" (மலை:395). 11. கட்டடக் கல்: "நிறைக் கல் தெற்றியும்" (மணி: 6:61).
12. பருக்கைக் கல்: "கல் அதர் அத்தம்" (மணி:13:39).
13. காவிக் கல்: "கல் உண் கலிங்கம் கட்டிய அரையினன்" (பெருங்:112:158).
14. இரத்தினம்: ''பொத்த நூல் கல்லும்" (நால்:38:6). 15. முத்து: "அரை பெறப் பிணித்த கல் குளி மாக்கள்" (கல்:43:2). 16. உலம் (திரண்ட கல்): ''கல் எனத் திரண்ட தோளினர்" (பால:13:3).

கல் எனுஞ் சொல் தோன்றிய மூலம் யாது?

கல்லுக்குக் காட்டப்படும் பல்பொருளில் ஒன்று துளைத்தல் பொருள் மற்றொன்று கருமைப்பொருள்.

இவற்றுள் குத்தி நிறுத்தப்படுதல் , உல்> குல் > குற்று>குத்து , எனும் விளக்கமும் வழங்கப்படுகிறது. எனினும் மலை எனுஞ் சொல்லின் வேர்ப்பொருள் கருமையைத் தழுவி தெளிவாய் விளக்கம் தரும்.

பல்வகை கருத்துகளை வழங்கிச் செல்லும் உல் எனும் வேர சேர்தல், கலத்தல் பொருளையும் தந்து நிற்கும். தெளிந்த நீர் கலக்கும் வேளையில் கலங்கல் ஆகும். கலங்கல் தெளிவற்றது. தெளிவற்றதோ இருண்மையானது. இருண்மையோ கருமையாகும். எனவே கருமை எனும் நிறப் பொருளுக்கு வேர் மூலம் சேர்தல், கலத்தலாகிய உல் என்பதேயாம். மலை தொலைவிலிருந்து பார்க்கும் வேளை கருத்தே தோன்றும்.

எனவே,

உல் > குல்> கல் = கருமை நிறமாகிய உயர் மலை எனும் பொருள் கல்லுக்கு ஆகியது.

புறப்பொருள் வெண்பாமாலையில் வரும்,

கல் தோன்றி மண் தோன்றா எனுந்தொடரில் கல் என்றது மலையையே.

புற நானூற்றில் வடா அது வடப்பெருங்கல் என்றதும் ஓங்கி உயர்ந்த இமய மலையையாம்.

உல் > முல்> மல் = கருமை .
மல்>மலை = கரிய வண்ண மலை.
மல்> மால் = கரிய வண்ணன்.

எனவே மலை என்றதற்கும் கருமையே வேராகும். உலகம் பரவிய தமிழின் வேர் கல் எனும் அரிய ஆய்வு நூலை எழுதிய பேராசிரியர் அரசேந்திரன் அவர்கள் அந்நூலில் விரிவான பல்வேறு விளக்கங்களை வழங்கியுள்ளார். அதனைப் படிப்பார் மேலும் ஆழமாய்த் தெரிந்து கொள்ளலாம்.

இங்குக் காலனல் எனும் சொல்லின் வேர் மூலம் kel என்பதை இந்தோ ஐரோப்பிய அகரமுதலிகள் தெளிவாக்குகையில் அதற்கும் மூலம் நம் தமிழே எனபதைக் காட்டலே நம் பணி. சிலர் தமிழிலிருந்துதான் இந்தோ ஐரோப்பியத்திற்குச் சென்றிருக்க

வேண்டுமா? அங்கிருந்து இங்கு வந்திருக்காதா என்பர். இந்த வினாவை ஏரணவியலாய்த் தொடுத்ததாய் அவ்வன்பர் கருதிக்கொள்வர்.

Kel எனும் வேரோடு இந்தோ ஐரோப்பிய வேர்ச்சொல் நின்று நிலைத்து விடும். அதற்கும் மேல் அது செல்லாது. ஆனால் தமிழில் வித்து வரை சொல்லின் மூலம் செல்லும். கல்லுக்கு ஏன் மலை எனும் பொருள் வந்தது என்பதை ஏரணவயியலாய்த் தமிழில் காட்டவியலும்; ஆனால் மேலை மொழிகளில் அதனைக் காட்ட வியலாது. இதனால் அவற்றை நாம் தாழ்த்தவில்லை. அவற்றின் இயன்மை அம்மட்டே. எனவே தமிழின் வேரே மூலமாய்ப் பிறங்கித் திகழ்வதை நம்மால் தெளிவுறக் காட்டவியலும். இத்தகு ஆய்வுக்கு மூலமாய் விளங்குவது பாவாணரியமே.

## மயங்கொலிச் சொல்

**அரம்**

தோல்

வண்டி

விரைவு

அரவங் கருவி " அரம்போலும் கூர்மைய ரேனும்" (குறள்.997)

**அறம்**

கடமை

உண்மை

ஒழுக்கம்

கற்பு

இன்பம்

நன்மை

அறச்சாலை

அறத்தெய்வம்

சமயம்

நோன்பு

நல்வினை "அறஞ்செய விரும்பு" (ஆத்திசூடி)

"நலம்புரி நங்கை வைத்து
நல்லறங் காக்க வென்றாள்" (சீவக.386)

# அத்தும் அனாமத்தும்

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"காயமே இது பொய்யடா– வெறும்
காற்றடைத்த பையடா
மாயனார் குயவன் செய்த
மண் பாண்டம் ஓடடா!"
(சித்தர் பாடல்கள்).

****

அத்து, அனாமத்து, காலி – இவை அரபிச் சொற்கள் எனப்படுகின்றன.

அத்து = வரம்பு, எல்லை.
அனாமத்து < அநாமத்து = கேட்பாரற்று – unclaimed.
காலி = வெற்றிடம்.

"அர் – அறு
அறு = வெட்டு, பிள, பிரி, நீங்கு, நீக்கு.
அறுவாள் = அறுக்கின்ற வாள்.
அறவு = நீக்கம், வரையறு – வரையறவு
அறுதி = முடிவு.
அறை = அடி, அறுக்கப்பட்ட அல்லது பிரிக்கப்பட்ட இடம்.
உறுப்பறை = உறுப்பறுக்கப்பட்டது.
வரையறு – வரையறை."
(பாவாணர் வேர்ச்சொல் சுவடி).

அறு – அறுதியிடல் – அறுதி = முடித்தல், தீர்த்தல், எல்லையிடல்.

அறு – அற்று – அற்றம்.
"விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு."
(திருக்குறள் 1186).

பொருள்: விளக்கொளி முடிந்துபோவதைப் பார்த்து இருள்படர்வதைப் போலக் கணவன் நீங்குவதைப் பார்த்துப் பசலை படர்கிறது.

அறு – அறுத்துப் பேசு = வரம்பிட்டுப் பேசுதல். ஓர் எல்லையில் நின்று பேசுதல்.
'என் அத்துக்கு வராதே' என்பது மக்கள் வழக்கு.
அறு – அற்று – அத்து.
(ஒ. நோ.: அற்றுப் போச்சு – அத்துப் போச்சு;
கற்றுக்கொடு – கத்துக்கொடு;
வற்றல் – வத்தல்;
அற்றைக் கூலி – அத்தக் கூலி – daily wages / daily rated employee).

அற்று – அத்து = அறுத்து வரையறை செய்யப்படும் எல்லை.
"அத்தம்² attam , n. < அற்றம். 1. End, termination; முடிவு." (தமிழ்ப் பேரகராதி).

"அத்தம் நண்ணிய அம் குடிச் சீறூர்
மக்கள் போகிய அணில் ஆடு முன்றில்"
(குறுந்தொகை 41: 3–4).

* அத்தம் = பாலை நிலம் – waste land.
வாழும் ஊரின் எல்லைப் புறத்தமைந்த நிலப்பகுதி.

"உலவை ஓமை ஒல்கு நிலை ஒடுங்கிச்,
சிள்வீடு கறங்கும் சேய் நாட்டு அத்தம்,
திறம் புரி கொள்கையொடு இறந்து செயின் அல்லது
அரும் பொருட் கூட்டம் இருந்தோர்க்கு இல் என," (நற்றிணை 252: 1–4)

* அத்தம் = வழி, எல்லை.
பொருள் தேடிச் செல்லும் தலைவன் தொலைவான நாட்டு எல்லைப்பகுதிக்குச் செல்கிறான். (பாலை எனின் ஆறலைத்தலின்றிப் பொருள் ஈட்டும் வகை வேறு இல்லை).

"பப்பு நீர் ஆய வீரர் பரு வரை கடலில் பாய்ச்ச
துப்பு நீர் ஆய தூய சுடர்களும் கறுக்க வந்திட்டு
உப்பு நீர் அகத்துத் தோய்ந்த ஒளி நிறம் விளங்க
அப்பால்
அப்பு நீராடுவான் போல் அருக்கனும் அத்தம்
சேர்ந்தான்."

(கம்பராமாயணம், யுத்தக்காண்டம் 1, 9,.18).

* அருக்கனும் அத்தம் சேர்ந்தான் = கதிரவனும் தன் எல்லையில் சென்று மறைந்தான்.

அத்தமி = எல்லை சேர்தல், மறைதல்.

அத்தமி – அத்தமித்தல் – அத்தமனம் > அஸ்தமனம்.

"கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன்
சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்...."

(காளமேகம் பாடல்).

அத்து மீறிப் பேசாதே,
அத்து மீறல் என்பன நல்ல தமிழே.

"காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்."

(திருக்குறள் 360)

பொழிப்பு : விருப்பு, வெறுப்பு, அறியாமை ஆகிய இக்குற்றங்கள் மூன்றனுடைய பெயரும் கெடுமாறு ஒழுகினால் துன்பங்கள் வாராமற் கெடும்.

* நாமம் = பெயர்.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவன் இருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி ஆனாள்
அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை
தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!"
(திருநாவுக்கரசர் தேவாரம் 6, 25, 7).

"ஆய காலையின், ஆயிரம் அம்பிக்கு
நாயகன், போர்க் குகன் எனும் நாமத்தான்,
தூய கங்கைத் துறை விடும் தொன்மையான்,
காயும் வில்லினன், கல் திரள் தோளினான்."

(கம்பராமாயணம் 1953).

பொருள்: அந் நேரத்தில் ஆயிரம் நாவாய்களுக்குத் தலைவனும், தூய்மையானகங்கைக் கரையில் நெடுங்காலமாகப் படகுவிடும் தன்மை உடையவனும், பகைவரைச் சீறி அழிக்கும் வில்லுடையவனும், மலை போல் திரண்ட தோளை உடையவனுமாகிய போர்த் தொழிலில் வல்ல குகன் என்ற பெயரை உடையவன்.

* நாமத்தான் = பெயருடையவன்.

"நனவு கனவு துயில் நாடுவார்க்கு அப்பால்
நனவு துயில் துரிய நாமத்து – எனும் அத்
துரியமதே உளதால் தோன்றும் மூன்றும் இன்றால்
துரிய அதீதம் துணி."

(இரமண மகரிசி, உள்ளது நாற்பது
(அநுபந்தம்) பிற்சேர்க்கை 32).

பொருள்: விழிப்பு, கனவு, தூக்கம் என்ற மூன்று நிலைகளையும் துய்க்கிற உயிருக்கு அம் மூன்றுக்கும் அப்பாலாக (அதீதமாக) உள்ள நனவுத் துயிலானது துரியமென்று பெயருள்ளதாயிற்று. அந்தத் துரியமென்ற நிலையே உண்மையானதாய் இருப்பதாலும், தோன்றுகின்ற விழிப்பு முதலான மூன்று நிலைகளும் பொய்யாவதாலும் அந்தத் துரியமே துரியாதீதம் என்று சொல்லப்படும் எனத் தெரிந்துகொள்.

* நாமத்து = பெயருடையது.

அல் வழி = அல்வழி
அல் திணை = அஃறிணை
அல் நாகரிகம் = அநாகரிகம்
அல் காலம் = அகாலம்
அல் நாமத்து = அநாமத்து > அனாமத்து = உடைமையாளரின் / உரிமையாளரின் பெயரற்றது.

கணக்கில் வராதது. கேட்பாரற்றது, கேட்பாரற்றுக் கிடக்கும் பொருள்.
பெயரற்ற கடிதம் = அநாமத்துக் கடிதம் = மொட்டைக் கடுதாசி.

கால் = காற்று.
"கால் கடிப்பு ஆகக் கடல் ஒலித்தாங்கு,
வேறு புலத்து இறுத்த கட்டூர் நாப்பண்,
கடுஞ் சிலை கடவும் தழங்கு குரல் முரசம்
அகல் இரு விசும்பின் ஆகத்து அதிர,"
(பதிற்றுப்பத்து 68: 1-4).
உரை: காற்று என்னும் தடி (கடிப்பு) கொண்டு அடிப்பதால் கடல் ஓலமிடும். அதுபோலக் கடுமையான ஒலி பாய்வதால் முரசு வானமாகிய நெஞ்செல்லாம் (ஆகம்) தழுதழுக்கும் குரலோடு அதிரும்.

"புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டி யாய் அண்ட வாணரும் பிறரும்
வற்றியாரும் நின்மலரடி காணா
மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றினாய் பதையேன் மனமிக உருகேன்
பரிகிலேன் பரியாவுடல் தன்னைச்
செற்றிலேன் இன்னுந் திரிதருகின்றேன்
திருப்பெருந்துறை மேவிய சிவனே."
(திருவாசகம், செத்திலாப் பத்து 2).
* புனல் கால் = நீரும் காற்றும்.

காலார உலவுதல் = காற்றுப் பொருந்த உதவுதல்.

'அறை காலியாக இருக்கிறது' என்றால் அறையில் ஒன்றும் இல்லை எனப் பொருள்கொள்கிறோம். அதாவது பருப்பொருள் இல்லை. நுண்பொருளான காற்று இருக்கிறதெனத் தமிழில் பொருள்படும். அது வெற்றிடமன்று.

'பையில் ஒன்றுமில்லை' என்றால் பையில் பொருள் ஒன்றும் இல்லை, காலியாக உள்ளது. அதாவது காற்று மட்டும் தான் உள்ளது எனப் பொருள்.

வயிறு காலியாக இருக்கிறது.

ஐம்பூத மெய்ப்பொருள் உணர்த்தும் சொல்லாகக் 'காலி' என்னும் சொல் உள்ளது.
'காலி' - நல்ல பொருண்மையுடைய தமிழ்ச் சொல்லே.

[வெற்றிடம் என்பதாகவும் ஒன்று இல்லை. வெற்றிடத்தில் காற்று இல்லை; ஆனால் வெளி (space) இருக்கிறது. வெள் (வெளி) உடையது வெற்று. வெற்றிடம் = வெளி (விசும்பு) உடைய இடம்.).

தமிழ் மொழியின் நெடுங்கணக்கில் மட்டுமே 'உயிர், மெய்' என்னும் வகைப்பாடு ஆழ்ந்த மெய்ப்பொருட் கூறுகளை உளஅடக்கியதாக உள்ளது.
"உயிரும் உடம்புமாம் முப்பதும் முதலே"
(நன்னூல் 59).

பெயரற்றது - நாமமற்றது - அநாமத்து - anonymous.
anonymous (adj.)
c. 1600, "without a name;" 1670s, "published under no name, of unknown authorship," from Late Latin anonymus, from Greek anonymos "without a name," from an- "without" (see an- (1)) + onyma, Æolic dialectal form of onoma "name" (from PIE root *no-men- "name").



# 655ஆம் குறட்பாவின் இருமைப் பொருண்மை: செயலும் உணர்வும்

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

மானுட மேம்பாட்டிற்கும் வெற்றிக்கும் வாய்ப்பாகின்ற வள்ளுவம், மனித எண்ணங்களை ஆராய்ந்து அவற்றை வெற்றிகொள்கின்ற முறையையும் எடுத்துரைக்கின்றது. இந் நோக்கில் ஆட்சி ஆளுமை/ உளவியல்/ மனித உறவியல் ஆகியன தொடர்பான,

எற்றென்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று ( 655 )

என்னும் குறட்பாவின் இருமைப் பொருண்மை கருதத்தக்கதாகும். அதாவது வருந்தத்தக்க இழிசெயல்களைச் செய்யலாகாது: செய்துவிட்டால் திருத்திக்கொள்க; மென்மேலும் அதற்காக வருந்தக்கூடாது என்னும் உளவியல் கொள்கை இதில் எடுத்துரைக்கப்படுகின்றது. இதிலுள்ள எற்று = இதைச் செய்துவிட்டோமே; ஏல்= விட்டால்: அன்ன= அத்தகையவற்றை ஆகிய சொற்களின் பொருளைப் புரிந்துகொண்டு, மற்று என்னும் இடைச்சொல் வினைமாற்றுப் பொருளில் [ நோக்குக: தொல்காப்பியம் , நூற்பா 747 ], அதாவது முன் தொடரில் சுட்டிய வினையினும் வேறான வினையைச் சுட்டி ஆளப்படுகிறது என்பதை அறிந்து, குறட்பாவின் கருத்தைத் தெளியலாம். அப்போது இக் குறட்பாவில் இரண்டு தொடர்கள் இயல்வதை அறியலாம். இவ் இரண்டு தொடர்களையும் மீண்டும் என்று பொருள்படுகின்ற மற்று என்னும் இடைச்சொல் இணைக்கின்றது. இங்கு,

தானே வருந்தத்தக்க இழிசெயல்களைச் செய்யலாகாது;
செய்துவிட்டால் திருத்திக்கொள்க; அதற்காக மென்மேலும் வருந்தக்கூடாது என்னும் ஆளுமைக் கொள்கை அறிவுறுத்தப்படுகின்றது.

ஆட்சிப் பொறுப்பில் இருப்போர் ஒவ்வொரு செயலையும் ஆராய்ந்து, தவறிழைக்காமல் ஆற்றவேண்டும்; தவறு நேர்ந்திடின் இனி அதைத் தவிர்க்கலாம்; மாறாக, செய்த தவற்றையே சொல்லியும் நினைந்தும் மீண்டும் மீண்டும் வருந்திக்கொண்டிருந்தால் ஆட்சிமுறை சீர்கெடும் என்பது ஆட்சியாளர்க்குக் கிளந்த அறவுரையாகும். இதைப் பொது நிலையில் நோக்கின்,
தானே வருந்தத்தக்க தவற்றை/ இழிசெயல்களைச் செய்யலாகாது;
செய்துவிட்டால் திருத்திக்கொள்க; மென்மேலும் தவறு செய்யக்கூடாது என்று அறியலாம். ஆகவே, தவறுவது மனித இயற்கை , அதைத் திருத்திக்கொள்க என்னும் அறவுரை என்றைக்கும் எந்த ஆட்சி முறைக்கும் பொருந்தக்கூடியது. இது ஆட்சியாளர்கள் சீராய்வு செய்து, திருத்தவேண்டியதையும், பொதுமக்கள் குற்ற/ இழி செயல்களைத் தவிர்க்கவும் வலியுறுத்துகின்றது. மனிதச் செயல்பாட்டின் மாறுபட்ட இருமை நிலையை, இரண்டு தொடர்களை இணைத்து, இருமைப் பொருண்மை அமைய வள்ளுவம் வகுத்துரைப்பது, சமூக மேன்மை கருதி ஏற்றுச் செயல்படத்தக்கது.



# பாவாணர் பக்கம்

## பதி

(1) சொல் :– பதி.

(2) சொல்வகை :– (part of speech of word–class) வினை. செயப்படுபொருள் குன்றாவினையும் செயப்படு பொருள் குன்றியவினையும்

(3) புடைபெயர்ச்சி (conjugation) : 8ஆவது வகை. பதிகிறேன் (நி. கா.) பதிந்தேன் (இ. கா.). பதிவேன். (எ.கா.)

(4) பொருளும் ஆட்சிமேற்கோளும் : (meanings and illustrative quotations.)

செயற்பெயர் வடிவு : (gerunidial form)

பதி – தல் = (செ. குன்றா வி.) 1. பதிவேட்டில் எழுதுதல், to register, enter in writing. 2. பெயர்ப் பட்டியிற் சேர்த்தல், to take on the roll

(செ. குன்றிய வி.) 1. ஆழ்தல், to sink in, as the foot or a wheel in mud; to enter, penetrate, as into a soft body. வண்டிச் சக்கரம் சேற்றிற் பதிகிறது. (உலக வழக்கு). 2. தாழ்ந்திருத்தல், to be low–lying, as land, to be depressed, sunk, hollow, worn away. நிலம் பதிந்திருக்கிறது (உ.வ.). (2.2.) 3. தங்குதல், to settle, abide; to perch, roost, as a bird. "பதிசென்று பதிந்தனன்" (தணிகைப்பு, பிரமன். 2). 4. நிலையாதல். to be permanent, as a post. எனக்கு அரண்மனையிற் பதிந்த வேலையில்லை.(நாஞ். உ. வ.) 5. ஊன்றுதல். to be absorbed, engrossed, involved, as the mind in any object. மனம் பாடத்திற் பதிகிறதா? (உ.வ.) 6. முத்திரை, எழுத்தச்சு முதலியன அழுந்துதல், to be imprinted, impressed, marked, stamped, engraven, indented, 7.அதிகாரம் பெறுதல், to be invested with power, authority. (W.), 8. இறங்குதல், to decline after meridinal transists: to be near setting, as a heavenly body: to descend, alight, as a bird. 9. விலை தணிதல், to be low, as price. விலையைப் பதியக் கேட்டான். (உ.வ.) 10. அமைதியாதல். to be mild, gentle or tractalle: to become submissive, modest or humble, பையன் பள்ளிக்கூடத்திற் பதிந்திருக்கிறான். (உ.வ.) 11. அஞ்சி யிணங்குதல் (அ) பின்வாங்குதல், to quail, flinch.

பெயரெச்சம் : (adjective participle)

இ.கா.பெ. பதிந்த நிலம், low land

செயற்பெயரும் தொழிற்பெயரும் : (gerund and verbal noun.)

பதிதல். பதிகை. பதிவது (the act of registering, sinking etc.

பதிவு, registration, sinking etc.

தொழிற்பெயரும் தொழிலாகுபெயரும் : (verbal noun and metonymical verbal noun.)

பதி = 1. பதிகை, penetration, transfixion, thrust. "நுண்ணிலைவேல் பதிகொண்டு." (சீவக. 1186). 2. பதியம். cluster of saplings planted temporarily. 3. நாற்று, sapling for transplantation. 4. பதிவிளக்கு, lamp fixed on a pot while exorcizing devils (W.). 5. உறைவிடம், adobe, residence (திவா.). "பதியிற் கலங்கிய மீன்" (குறள். 1116), 6. வீடு. home, house (திவா.) 7. கோயில், temple (சங். அக.) 8. குறி சொல்லும் இடம் an oracular shrine. "பதியிருந்த பதி யெல்லாம் பதிவாகச் சென்றேன்" (நாஞ். மருமக். மா.) 9. ஊர், town, city. village. "பதியெழு வறியாப் பழங்குடி" (சிலப். 1:15) 10. ஞாலம் (பூமி). the earth. (தைலவ. தைவ.) 11. குதிரை, horse. (அக. நி.)

பதிவு = 1. அழுந்துகை. impression, indentation. 2. பள்ளம். lowness of a surface: depression. நிலம் பதிவாயிருக்கிறது. (உ.வ) 3. பதியம், cluster of

saplings planted temporarily. 4. விண்மீன்களின் சாய்வு, declination of a heavenly body. (W). 5. எழுவதற்கு முன்னுள்ள திங்கள் (சந்திரன்) நிலை, situation of the moon before rise. (W.) 6.பதுக்கம், stooping, crouching, lurking as a thief of a beast ready to spring on its prey: ambush. 7. மனம் ஊன்றுகை, engrossment, absorpion in an object or pursuit. 8. கணக்குப் பதிகை, registering, entering, as in account. 9.பதிவு செய்யப்பட்டது, that which is registered. 10. பதியப்பட்டது. registry, entry. 11. தீர்மானிக்கப்பட்ட செலவு. allotment, as in a budget. "இந்தக் கோவிலில் சங்கு ஊதுவதற்குப் பதிவு ஏற்பட வில்லை" (நாஞ். உ. வ.) 12. நிலைப்பு (நிலைவரம்), permanence, இந்தவூரில் அவன் பதிவாயிருக்கிறாள் (உ.வ.) 13. வழக்கம், custom, habit. 14.அமைதி, submission obedience, humility. " பதிவாய் நடந்துகொள்" (உவ.), 15. விலைத்தணிவு, lowness of price (W.).

**பதியம்** = 1. நாற்று முடியை இரண்டொரு நாட்குச் சேற்றில் பதிந்து வைக்கை, temporary planting of a cluster or saplings in mud. 2. ஊன்றி நடுஞ் செடி கொடி கிளை முதலியன. slip, shoot graft. 3. இலைப்பாசி, a species of duckweed. "செறியணிப் பதியத்திடை வளரிளஞ் சேல்கள்" (இரகு. நாட்டுப்.7),

**பதியம் – பதிகம்** = "பதிகம் பரிக்குங் குழல்" (மறைசை 17.)

திரிசொற்கள் : (derivatives)

**பதிவுகாரன்** = பெ. வாடிக்கைக்காரன், customer.

**பதி – பதம்**. பெ. 1. ஆழ வேரூன்றும் அறுகம்புல். bermuda grass (திவா.) 2. பதிவாக (பதுங்கி) இருந்து காக்குங் காவல். watch. (யாழ். அக.) 3. பதிவாக நகரில் திரிந்து ஆயும் மாறுகோலம். disguise (யாழ். அக.) 4. மீன் வரும்வரை பதிவாக நிற்கும் கொக்கு. crane (யாழ். அக.) 5. சூடு தணிந்த நிலை, coolness. 6. ஈரம், dampness. moisture. (திவா.) "மாவெலாம் பதம் புலர்ந்த" (கம்பரா. உயுத்.மூலபல. 79). 7. தண்ணீர் water (திவா.) 8. குளிர்ச்சியான கள், toddy, மகிழ்ப் பதம் பன்னாட் கழிப்பி" (பொருந. 111). 9. (மதுவின்) இனிமை; sweetness, gentleness. "வெங்குரு வரசர் பதம்பெற வெழுதி" (திருவாலவா. 38:40) 10. இன்பம். joy, delight (சூடா.)

11. வன்மை, சூடு முதலியன தணிந்து உண்பதற்கும் நுகர்தற்கும் ஏற்ற நிலை (பக்குவம். வ.); proper consistency, required degree of hardness or softness, proper quality or fitness "சில்பத வுணவின்" (பெரும்பாண். 64). 12. (வெந்து உண்பதற்கேற்ற) சோறு (திவா.) 13. அவிழ், a grain of boiled rice (சூடா.) 14. உணவு cooked food (திவா.) "பதமிகுத்துத் துய்த்தல் வேண்டி" (சிலப். 28:189) 15. பொருள், thing, substance, wealth. ஒ. நோ: கூழ் = உணவு, பொருள். (யாழ். அக.) 16. (பதமான) மென்மை, softness. 17. இளம்புல். tender grass (பிங்.) 18. ஏற்ற சமையம். fit occasion, opportunity. "எண்பதத்தா லெய்தல் (குறள். 991). 19. பொழுது, time (பிங்.) 20. நாழிகை. Indian hour of 24 minutes (திவா.) 21.தகுதி, suitability. 22.அழகு. beauty (W), 23. (தகுந்த) அளவை, measure (சங். அக.), 24. (தகுந்த) முயற்சி, effort (யாழ். அக.), 25. (கத்தியின் தகுந்த நிலையான) கூர்மை, sharpness, as of the edge of a knife: கத்தி பதமாயிருக்கிறது. (உ.வ.) 26. (தகுந்த நிலையைக் காட்டும்) அடையாளம். sign, symptom. indication (சங்.அக.).

**பதஞ்செய்தல்** =(செ.குன்றாவி.)1.பயன்படும்படி செய்தல், to make a thing fit for use. 2. பதப்படுத்துதல். to temper. 3. மெது வாக்குதல், to soften, "குளிர்ந்து நின்றுபதஞ் செயுநீர்" (சி. சி. 2: 66).

**பதந்தவறுதல்** = (செ. குன்றிய வி.) 1. நிலையினின்று நழுவுதல். to slip down, as form one's position, 2. இரவில் வெள்ளி விழுதல், to fall, as a meteor by night (W.).

**பதநிறம்** = பெ. ஊன்சிலை (மாமிசச்சிலை). a kind of black stone (யாழ். அக.)

**பதநீர்** (பாண்டி நாட்டு வழக்கு), பெ. தெளிவு (சோழ கொங்கு நாட்டு வ.). பனஞ்சாறு (சென்னை வ), அக்கார நீர் (நாஞ்சில் நாட்டு வ.) = புளிப்பேறாத படி சுண்ணாம்பு பூசப்பட்ட முட்டியிலிறக்கிய இனிப்புக் கள்; sweet toddy drawn in a pot lined with lime to prevent fermentation.

**பதப்படுதல்** =(செ.குன்றியவி.).1 பருவமடைதல் (பக்குவப்படுதல்). to be seasoned. 2. பழுத்தல், to ripen. 3. ஈரமாதால், to dampen, to moisten.

பதப்படுத்துதல் = (செ. குன்றா வி.) 1. பயன்படும்படி செய்தல்; to make a thing fit for use. 2. ஈரமாக்குதல், to dampen, to moisten. 3.இணக்குதல், to reconcile.

பதப்பாடு = பெ. 1. பருவமாகை (பக்குவமாகை) being seasoned tempered, fitted, adapted or trained (W.) 2. பழுக்கை, ripening (W). 3. மதிலுறுப்பு, component parts of a fortification including ornamental figures (பிங்.)

பதம் – பதன் = பெ. being fit for use.

பதனழிதல், (செ. குன்றிய வி.) பருவநிலை கடத்தல்: to become overripe, as fruits.

பதனழிவு பெ. பதக்கேடு; over ripeness: overboiled, decayed or rotten condition: debility (W.)

பதனிடுதல் (செ. குன்றா வி.) தோல் முதலியவற்றைச் சீர்படுத்துதல்: to tan; to temper, season, mollify (W.)

பதன் – பதனம்.

பதனம்[1] = பெ. 1. இறக்கம். descending, falling down (யாழ். அக) 2. தாழ்மை, humility (சங். அக.) 3. அமைதி. mildness, gentleness. பதனமானவன் (உ.வ) 4. கோள்களின் குறுக்கு வரை; latitude of planets, 5. பிறப் போரைக்கு (சென்ம ராசிக்கு, வ) ஆறாம் எட்டாம் பன்னிரண்டாம் இடங்கள் (சங். அக.); sixth, eighth and twelfth houses from the ascendant.

பதனம்[2] = பெ. 1. காப்புக் கவனம் (பத்திரம் வ.) care caution attention circumspection: "பட்டணம் பதனம்" (இராமநா. உயுத்.23) 2. பாதுகாப்பு. safety. security. protection; "பதன கவசத்துடன்" (ஞானவா. சுக்கி. 19).

பதனம் – பதணம் = பெ. 1. மதிலுண்மேடை. mound or raised terrace of a fort. rampart (தி. வா:) "நெடுமதி னிரைப் பதணத்து (. 22:25). 2. மதில், walls of a fort, fortification (W.).

பதம்[2] = பெ. 1.நிலத்திற் பதியும் உறுப்பாகிய பாதம். foot ஏறிபதத்தா னிடங்காட்ட" (புறநா. 4). 2. செய்யுளடி. line of a stanza, 3. நாலிலொன்று. quarter (பிங்.). 4. (பாதம் படுவதால் ஏற்படும்) வழி. way, road, path (திவா.) 5. (பதிந்து தங்கும்) இடம். place. site. location. "பதங்க ளேழும்" (தக்கயாகப். 147). 6. பதிந்து தங்கும் வீடு போன்ற கட்டடங்கள் : (astrol.) compartments drawn on a chart for determining the site for building a house (W.). 7. பதிவாயிருந்து செய்யும் அலுவற் பதவி அல்லது வாழும் பதவி post, position, station, rank. "பிரிவில் தொல்பதந் துறந்து" (கம்பரா.அயோத். திருவடிசூட்டு. 101). 8. பேரின்பப் பதவி; state of future bliss. "சிவபத மளித்த செல் வமே" (திருவாச. 37:3). 9. தரம். status. capacity. "பெண்டிருந் தம்பதம் கொடுக்கும்" (புறநா. 151) 10. வரிசை. (தரங்காட்டும்) வரிசை, row. order. series (பிங்.) 11. பொன்னின் தரமான ஒளி, brilliance. brightness "பொற்பதப் பொது" (கோயிற்பு. காப்பு).

பதம் – பதவு – பதவம் = பெ. ஆழ்ந்து வேரூன்றும் அறுகு bermuda grass. "பெரும்பதவப் புல்மாந்தி (கலித் 109).

பதம்–பதவு–பதவி.

பதவி[1] = 1. நிலை, station, situation, position, rank 2. வழி, way. path, road. (திவ். இயற். 2:89. அரும்.) 3. விண்ணுலகம், words of the gods, lower states of bliss "பதவியை யெவர்க்கும் நல்கும் பண்ணவன்" (கம்பரா. கிட்கிந்தா வாலிவ. 136). 4. வீட்டுலகம். final states of bliss (பிங்.).

பதவி[2] = பெ. பணிந்த நீர்மையுள்ளவன். person of real humility: "பதவியாய்ப் பாணியானீ ரேற்று" (திவ். இயற்.2:89)

பதவு– பதவிது –பதவிசு = பெ. அமைதி. mildness, humbleness. ஒ.நோ: நறுவிது–நறுவிசு.

பதவியது = பெ. 1. மெல்லியது, that which is soft or smooth, 2. அமைதியானது, that which is mild of gentle (W.).

பதவியன் = பெ. அமைதியானவன், man of mild, amiable disposition (W.).

தொடரும்....

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 155–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 155–ஆவது கூட்டம் 05.07.2024 ஆம் நாள் நடைபெற்றது. இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. தமிழ்க் கலைக்கழகத்தின் 155–ஆவது கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர்.

இக்கூட்டத்தில் 147 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | | |
|---|---|---|
| Acid tongued | – | கடு நாக்கு |
| Addictive cravings | – | வேட்கைப் பித்து |
| Antenna diversity | – | பன்முக அலைவாங்கி |
| App code | – | செயலிக் குறி |
| Archon | – | தலைமை நயன்மையர் |
| Artificial taste | – | செயற்கைச் சுவை |
| Audio player | – | ஒலி இயக்கி |
| Augmentation system | – | துல்லிய இடங்காட்டி |
| Bailout programme | – | இடருதவி நிரல் |
| Balloon modelling | – | ஊதாம்பி வடிவாக்கம் |
| beefing up | – | வலுவூட்டல் |
| Birbone | – | ஏய்ப்புச் செயல் |

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 156–ஆவது கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 156–ஆவது கூட்டம் 26.07.2024 ஆம் நாள் நடைபெற்றது. கூட்டத்தில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ்வளர்ச்சி இயக்கக உதவி இயக்குநர் (ஆட்சிமொழி) திருமதி ந. ஜோதிலெட்சுமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர்.

இக்கூட்டத்தில் 127 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

**ஏற்பளிக்கப்பெற்ற கலைச்சொற்களுள் சில :**

| | | |
|---|---|---|
| Blink message | – | நொடிச்செய்தி |
| Bubble style | – | பசப்புப் பேச்சு |
| Charge rage | – | மின்னேற்று நிலையம் |
| Cocktail sauce | – | கலவைக் குழைமம் |
| Cold air machine | – | குளிர்வளிப் பொறி |
| Conversationalist | – | உரைவல்லன் |
| Data obfuscation | – | தரவு மறைப்பு |
| Debt of honour | – | மதிப்புறு கடன் |
| Derivation proceeds | – | வழித்தோன்றல் விளைபயன் |
| Dexting | – | அல்ல குறி |
| Digital wellbeing | – | எண்மத் தாக்கம் |
| doum palm | – | கிளைப் பனை |

# செய்தி நறுக்குகள்

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்கக விருது ஆக., 30ம் தேதிக்குள் தமிழறிஞர்கள் விண்ணப்பிக்கலாம்

**கல்பாக்கம், ஜூலை 29-**

தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகர முதலி இயக்ககத்தின் இயக்குனர் க. பவானி வெளியிட்ட அறிக்கையில், 'தமிழக அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் சார்பில், 2024ம் ஆண்டிற்கான விருதுகள் வழங்கப்பட உள்ளன.

**தேவநேயப் பாவாணர் விருது:**

தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, அகராதி உருவாக்குதல் மற்றும் தனித்தமிழைப் பின்பற்றுதல் உள்ளிட்ட ஆய்வும் தமிழ் ஈடுபாடும் கொண்டு பணியாற்றும், அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் தகுதி வாய்ந்த உள்நாட்டு அறிஞர் ஒருவருக்கு ஆண்டுதோறும் தேவநேயப்பாவாணர் விருது வழங்கப்படும்.

இவ்விருது 2020ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது. விருதுத் தொகை ரூ.2 லட்சம், ஒரு சவரன் தங்கப் பதக்கம்.

**வீரமாமுனிவர் விருது:**

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கி, தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கி, தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள, தமிழைத் தாய் மொழியாகக் கொள்ளாத பிறப்பால் வெளிநாட்டைச் சார்ந்த தகுதி வாய்ந்த அகராதியியல் அறிஞர்கள், வெளி நாடு வாழ் அகராதியியல் அறிஞர்கள், இந்தியாவின் பிற மாநிலங்களில் வாழும் அகராதியியல் அறிஞர்கள், தமிழகத்தில் உள்ள அகராதியியல் அறிஞர்களுள் ஒருவருக்கு ஆண்டு தோறும் வீரமாமுனிவர் விருது விருது வழங்கப்படும்.

இவ்விருது 2020ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது. விருதுத் தொகை ரூ.2 லட்சம், ஒரு சவரன் தங்கப் பதக்கம்.

**நற்றமிழ்ப் பாவலர் விருது:**

சதங்களின் கவிதைப் படைப்புகளில் (மரபுக் கவிதை, புதுக்கவிதை) பிறமொழிக் கலப்பில்லாத தூயதமிழ்ச் சொற்களையும் புதிய தமிழ்க் கலைச்சொற்களையும் பயன்படுத்தி மொழிக்குப் புத்துயிரும் புது மலர்ச்சியையும் ஏற்படுத்தும் இரு பாவலர்களுக்கு ஆண்டுதோறும் நற்றமிழ்ப் பாவலர் விருது வழங்கப்படும்.

இவ்விருது 2020ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது. விருதுத் தொகை ரூ.50 ஆயிரம், ரூ.25 ஆயிரம் மதிப்பிற்குரிய தங்கப் பதக்கம்.

**தூயதமிழ் ஊடக விருது:**

பிறமொழிக் கலப்பின்றித் தூயதமிழைப் பயன்படுத்தி ஊடகப் பணிகளை ஆற்றிவரும், அச்சு ஊடகம் மற்றும் காட்சி ஊடகம் (தொலைக்காட்சி மற்றும் வலையொளி) என இரு ஊடகங்களுக்கு ஆண்டு தோறும் தூயதமிழ் ஊடக விருது வழங்கப்படும். இவ்விருது 2020ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது. விருதுத் தொகை ரூ.50 ஆயிரம், ரூ.25 ஆயிரம் மதிப்பிற்குரிய தங்கப் பதக்கம்.

**தூயதமிழ்ப் பற்றாளர் விருது:**

நடைமுறை வாழ்க்கையிலும், பேச்சுவழக்கிலும் பிறமொழிக் கலப்பில்லாமல், எப்பொழுதும், எங்கும் எதிலும் தூயதமிழையே பயன்படுத்துவோரிலிருந்து மாவட்டத்திற்கு ஒருவர் வீதம் மொத்தம் 38 பேருக்குத் தூயதமிழ்ப் பற்றாளர் விருது வழங்கப்படும். இவ்விருது 2020ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டு வருகிறது.

விருதுத் தொகை ரூ.20ஆயிரம், பாராட்டுச் சான்றிதழ்.

**தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு:**

நடைமுறை வாழ்க்கையிலும், பேச்சுவழக்கிலும் பிறமொழிக் கலப்பில்லாமல், எப்பொழுதும், எங்கும் எதிலும் தூயதமிழையே பயன்படுத்துவோரிலிருந்து மாநில அளவில் தேர்வு செய்யப்படும் மூன்று பேருக்குத் தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு வழங்கப்படும். இப்பரிசு 2019ம் ஆண்டு முதல் வழங்கப்பட்டுவருகிறது.

பரிசுத் தொகை ரூ.5ஆயிரம், பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படும். இந்த விருதுகளுக்கு ஆக., 30ம் தேதிக்குள் விண்ணப்பிக்க வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு: 044 -2952 0509 என்ற எண்ணை தொடர்பு கொள்ளலாம்' என, தெரிவித்துள்ளார்.

## 5 வகையான விருதுகளுக்கு விண்ணப்பம் வரவேற்பு

**சென்னை, ஜூலை 27-**

நடப்பாண்டு ஐந்து வகை விருதுகள் மற்றும் தூய தமிழ் பற்றாளர் பரிசுக்கு, தமிழ் அறிஞர்களிடம் இருந்து, விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

தமிழக அரசு சார்பில், தேவநேயப் பாவாணர் விருது, வீரமாமுனிவர் விருது, தூய தமிழ் ஊடக விருது, நற்றமிழ் பாவலர் விருது, தூய தமிழ் பற்றாளர் விருது மற்றும் தூய தமிழ் பற்றாளர் பரிசு போன்றவை வழங்கப்பட உள்ளன.

விரும்புவோர், http:// sorkuvai.tn.gov.in என்ற இணையதளத்தில் விண்ணப்பத்தை பதிவிறக்கம் செய்யலாம்.

பூர்த்தி செய்த விண்ணப்பத்தை, இயக்குனர், செந்தமிழ் சொற்பிறப்பியல் அகர முதலி திட்ட இயக்ககம், நகர் நிர்வாக அலுவலக கட்டடம், முதல் தளம், 75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர், சென்னை – 28 என்ற முகவரியில் நேரில் வழங்கலாம்.

தபாலில் அல்லது awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாக, ஆக., 30 மாலை 5:00 மணிக்குள் அனுப்ப வேண்டும்.

மேலும் விபரங்களுக்கு, 044 – 2952 0509 என்ற தொலைபேசி எண்ணை தொடர்பு கொள்ளலாம்.

## அகரமுதலி இயக்கக கூட்டத்தில் 147 கலைச்சொற்கள் ஏற்பு

**சென்னை, ஜூலை 5:** செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக கூட்டத்தில் 147 தமிழ்க் கலைச்சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டுக்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழக அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக் கழகம்' செயல்பட்டு வருகிறது.

மக்களின் பேச்சு வழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றுக்கு இணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன.

அந்தச் சொற்கள் மாதம் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக் கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைதளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

அந்த வகையில் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக் கழகத்தின் 155-ஆவது கூட்டம் சென்னை பட்டினப்பாக்கத்தில் உள்ள அதன் அலுவலகத்தில் வெள்ளிக்கிழமை நடைபெற்றது.

இந்தக் கூட்டத்தில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு. பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு. ஆல்துரை, அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் கலந்து கொண்டனர்.

இக்கூட்டத்தில் Antenna diversity- பன்முக அலைவாங்கி, App code - செயலிக் குறி, Artificial taste - செயற்கைச் சுவை, Audio player - ஒலி இயக்கி, Augmentation system - துல்லிய இடங்காட்டி, beefing up - வலுவூட்டல், Birbone - ஏய்ப்புச் செயல் ஆகியவை உள்ளிட்ட 147 தமிழ் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.


இந்தியாவில் அதிக படங்களுடன் வெளிவரும் ஒரே மாலை நாளிதழ்

India's No.1 English Evening Daily
An Inspiring National Daily That Touches Your Heart
EVENING TAMIL NADU

மாலை தமிழகம்
Maalai Tamizhagam
Evening Tamil Daily
www.maalaitamizhagam.com
e-mail: maalaitamizhagam@gmail.com

சென்னை Chennai 27-7-2024 | சனிக்கிழமை (ஆடி 11) | வெளியூர் Out Station 28-7-2024 | Volume - 15 Issue -130 | பக்கம் Pages 6 | விலை Price ₹.3




## அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழக 156வது கூட்டம்; 127 சொற்கள் ஏற்பு!

**கல்பாக்கம், ஜூலை 27 -**



இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறை சார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன்வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக் கழகம்' செயற்பட்டுவருகிறது.

மக்களின் பேச்சு வழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப் படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன. அந்த வகையில் தமிழ்க்கலைக்கழக 156வது கூட்டம் நேற்று (26ம் தேதி) அலுவலக கருத்தரங்க கூடத்தில் நடைபெற்றது.

இதில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் கு.பாலசுப்பிரமணியன், முனைவர் இரா.கு.ஆல்துரை, அ.மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், தமிழ்வளர்ச்சி இயக்கக உதவி இயக்குனர் (ஆட்சிமொழி) ந.ஜோதிலெட்சுமி, உலகத் தமிழாராய்ச்சிநிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா.சுலோசனா, நூல் மதிப்புரையாளர் கவிஞர் மெய்ஞானி பிரபாகர பாபு மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர். இந்த கூட்டத்தில் 127 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

அவற்றில், Blink message - நொடிச்செய்தி; Bubble style-பசப்புப் பேச்சு; Charge rage- மின்னேற்று நிலையம்; Cocktail sauce - கலவைக் குழைமம்; Cold air machine- குளிர்வளிப் பொறி; Conversationalist- உரைவல்லன்; Data obfuscation - தரவு மறைப்பு; Debt of honour - மதிப்புறு கடன்; Derivation proceeds- வழித்தோன்றல் விளைபயன்; Dexting- அல்ல குறி; Digital wellbeing-எண்மத் தாக்கம்; doum palm - கிளைப் பனை உள்ளிட்டவை ஆகும்.





**செம்மொழித் தமிழ் காப்போம்!** **செந்தமிழால் பேசுவோம்!**






தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை
**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**
நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028
pavanarvirudhu@gmail.com 044-29520509


# தேவநேயப் பாவாணர் விருது – 2024

தமிழ் வேர்ச்சொல் ஆய்வு, அகராதி உருவாக்குதல் மற்றும் தனித்தமிழைப் போற்றுவதற்கு ஊக்கமளிக்கும் வகையில் அகராதியியல் துறையில் சிறந்து விளங்கும் தகுதிவாய்ந்த உள்நாட்டு அறிஞர் ஒருவருக்குத் தமிழ்நாடு அரசால் 'தேவநேயப் பாவாணர் விருது' உருபாய் இரண்டு இலக்கம், ஒரு சவரன் தங்கப்பதக்கம் (ம) தகுதியுரை வழங்கப்படவுள்ளன. விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த தமிழறிஞர்கள் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சல் வழியாகவோ, pavanarvirudhu@gmail.com என்ற மின்னஞ்சல் வழியாகவோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் அனுப்பிட வேண்டும்.

குறிப்பு : உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர் (மு.கூ.பொ.)

செம்மொழித்தமிழ் காப்போம் !

செந்தமிழில் பேசுவோம் !






தமிழ்நாடு அரசு

தமிழ் வளர்ச்சித் துறை

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,

சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028

Veeramamunivaraward@gmail.com 044–29520509




# வீரமாமுனிவர் விருது – 2024



தமிழ் அகராதிகளை வெளியிட்டு, அகராதியியல் துறையில் சிறந்த பங்களிப்பை நல்கிவரும் அகராதியியல் அறிஞர்களைப் போற்றி ஊக்கமளிக்கும் வகையில் தமிழ்நாடு அரசால் 'வீரமாமுனிவர் விருது' உருபா இரண்டு இலக்கம், ஒரு சவரன் தங்கப்பதக்கம் (ம) தகுதியுரை வழங்கப்படவுள்ளன. விருதுபெறுவதற்குத் தகுதிவாய்ந்த அகராதியியல் அறிஞர்கள் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சல் வழியாகவோ, veeramamunivaraward@gmail.com என்ற மின்னஞ்சல் வழியாகவோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் அலுவலகத்தில் கிடைக்குமாறு அனுப்பிட வேண்டும்.

## வீரமாமுனிவர் விருதுக்கு விண்ணப்பிக்கத் தகுதியுடையோர்

வீரமாமுனிவர் நெறியில் அவர்தம் படைப்பு நடையில் சிற்றிலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் உருவாக்கியும், தமிழ் அகராதித் துறையில் சிறந்து விளங்கியும், தமிழ் அகராதிகளையும் வெளியிட்டுள்ள தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத பிறப்பால் வெளிநாட்டைச் சார்ந்த தகுதி வாய்ந்த அகராதியியல் அறிஞர்கள், வெளிநாடு வாழ் அகராதியியல் அறிஞர்கள், இந்தியாவின் பிற மாநிலங்களில் வாழும் அகராதியியல் அறிஞர்கள், தமிழ்நாட்டில் வாழும் அகராதியியல் அறிஞர்கள் ஆகியோர் விண்ணப்பிக்கலாம்.

இயக்குநர் (மு.கூ.பொ.)

செம்மொழித் தமிழ் காப்போம்!

செந்தமிழால் பேசுவோம்!


தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028

oodagavirudu@gmail.com

044–29520509




# தூயதமிழ் ஊடக விருது – 2024

தூயதமிழ்ச் சொற்களையும், காலத்திற்கேற்ற புதிய கலைச்சொற்களையும் பயன்படுத்தி செய்திகளையும், நிகழ்ச்சிகளையும் வழங்கும் காட்சி (ம) அச்சு ஊடகங்களுக்குத் 'தூயதமிழ் ஊடக விருது' உருபா 50,000/– பரிசுத் தொகை, உருபா. 25 ஆயிரம் மதிப்பில் தங்கப்பதக்கம் (ம) தகுதியுரை வழங்கப்படவுள்ளன. தகுதி வாய்ந்த ஊடகத்தார் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சல் வழியாகவோ, oodagavirudu@gmail.com என்ற மின்னஞ்சல் வழியாகவோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை5.00 மணிக்குள் அனுப்பிட வேண்டும்.

குறிப்பு : தமிழ்நாட்டில் இயங்கும் ஊடகங்கள் மட்டுமே விருதுக்கான தேர்வுக்கு எடுத்துக்கொள்ளப்படும். உரிய முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர் (மு.சு.பொ.)

செம்மொழித் தமிழ் காப்போம்!

செந்தமிழால் பேசுவோம்!

தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**

நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028



paavalarvirudu@gmail.com

044–29520509

# நற்றமிழ்ப் பாவலர் விருது – 2024

பிறமொழிக் கலப்பில்லாமல் தூயதமிழ்ச் சொற்களைப் பயன்படுத்தி, தம் கவிதைப் படைப்புகளை உருவாக்கும் மரபுக்கவிஞர், புதுக்கவிஞர்களிலிருந்து முறையே ஒவ்வொருவரைத் தேர்வு செய்து "நற்றமிழ்ப் பாவலர் விருது" உருபா 50,000/– பரிசுத்தொகை, தங்கப் பதக்கம் (ம) தகுதியுரை வழங்கப்படவுள்ளன. தமிழாய்ந்த பெருமக்கள் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சல் வழியாகவோ, paavalarvirudu@gmail.com என்ற மின்னஞ்சல் வழியாகவோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் விருதுக்குரிய கவிதை நூல்களோடு இணைத்து அனுப்ப வேண்டும்.

குறிப்பு : ஒருவரே புதுக்கவிதை, மரபுக்கவிதை இரண்டும் எழுதுபவராக இருந்தாலும் ஏதேனும் ஒரு பிரிவிற்குத்தான் விண்ணப்பிக்க வேண்டும். உரிய சான்றுகளுடன் முழுமையாக நிரப்பப்பட்ட விண்ணப்பங்கள் மட்டுமே ஏற்கப்படும்.

இயக்குநர் (மு.கூ.பொ.)

செம்மொழித் தமிழ் காப்போம்!

செந்தமிழால் பேசுவோம்!


தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை
**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**
நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028
patralarvirudhu@gmail.com
044–29520509




# தூயதமிழ்ப் பற்றாளர் விருது – 2024

நடைமுறை வாழ்க்கையில் தூயதமிழிலேயே பேசுகின்ற தகுதி வாய்ந்த தூயதமிழ்ப் பற்றாளர்களிலிருந்து மாவட்டத்திற்கு ஒருவரைத் தேர்வு செய்து 'தூய தமிழ்ப் பற்றாளர் விருது' உருபா 20,000/– பரிசுத் தொகை (ம) பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படவுள்ளன. தமிழாய்ந்த பெருமக்கள் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சலிலோ, patralarvirudhu@gmail.com என்ற மின்னஞ்சலிலோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் அனுப்பிட வேண்டும். விண்ணப்பிப்போர் தமிழறிஞர்கள், அரசு அலுவலர்கள் (அ) பேராசிரியர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிப்போரின் ஒருபக்க அளவிலான தன்விளக்கக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் (Photo) இணைத்திட வேண்டும்.

குறிப்பு :

கடந்த ஆண்டுகளில் தூயதமிழ்ப் பற்றாளர் விருதோ (அ) தூயதமிழ்ப் பற்றாளர் பரிசோ பெற்றவர்களின் விண்ணப்பங்களும், உரிய நாளில் பெறப்படாத விண்ணப்பங்களும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா. சொந்த மாவட்டத்தை விட்டு வேறு இடத்தில் 5 ஆண்டுகளுக்கு மேலாக வாழ்வோர், தற்போதைய வாழும் மாவட்டத்தைக் குறிப்பிட்டு விண்ணப்பிக்க வேண்டும். விண்ணப்பங்களின் அடிப்படையில் ஏற்புடைய நாளில் முன்னறிவிப்பின்றி விண்ணப்பிப்போரின் தமிழ்ப் பற்றை ஆராயும் வகையில் அலைபேசிவழி நேர்காணல் நடத்தப்பெறும்.

இயக்குநர் (மு.க.பொ.)





**செம்மொழித் தமிழ் காப்போம்!** **செந்தமிழால் பேசுவோம்!**






தமிழ்நாடு அரசு
தமிழ் வளர்ச்சித் துறை
**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்**
நகர் நிருவாக அலுவலக வளாகம், முதல்தளம், எண்.75,
சாந்தோம் நெடுஞ்சாலை, மே. இரா. செ. நகர், சென்னை– 600 028

patralarparisu@gmail.com 044–29520509


# தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு – 2024

நடைமுறை வாழ்க்கையில் தூயதமிழிலேயே பேசுகின்ற தகுதிவாய்ந்த தூயதமிழ்ப் பற்றாளர்களிலிருந்து மாநில அளவில் மூவரைத் தேர்வு செய்து 'தூயதமிழ்ப் பற்றாளர் பரிசு' உருபா 5,000/– பரிசுத் தொகை (ம) பாராட்டுச் சான்றிதழ் வழங்கப்படவுள்ளன. தமிழாய்ந்த பெருமக்கள் sorkuvai.com (அ) http://sorkuvai.tn.gov.in என்ற இணையதளம் வழியாக விண்ணப்பங்களைப் பதிவிறக்கம் செய்து, நிரப்பி, மேற்காணும் அலுவலக முகவரிக்கு நேரிலோ, அஞ்சல் வழியாகவோ, patralarparisu@gmail.com என்ற மின்னஞ்சல் வழியாகவோ அல்லது http://awards.tn.gov.in என்ற இணையதளம் வழியாகவோ 30.08.2024 ஆம் நாள் மாலை 5.00 மணிக்குள் அனுப்பிட வேண்டும். விண்ணப்பிப்போர் தமிழறிஞர்கள், அரசு அலுவலர்கள் (அ) பேராசிரியர்கள் இருவரிடம் தம் தனித்தமிழ்ப் பற்றை உறுதிசெய்து நற்சான்றிதழ் பெற்று இணைக்க வேண்டும். நற்சான்றளிப்போரின் ஒருபக்க அளவிலான தன்விளக்கக் குறிப்புகளையும் ஒளிப்படத்துடன் (Photo) இணைத்திட வேண்டும்.

குறிப்பு : கடந்த ஆண்டுகளில் தூயதமிழ்ப் பற்றாளர் விருதோ (அ) தூயதமிழ்ப் பற்றாளர் பரிசோ பெற்றவர்களின் விண்ணப்பங்களும், உரிய நாளில் பெறப்படாத விண்ணப்பங்களும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டா. சொந்த மாவட்டத்தை விட்டு வேறு இடத்தில் 5 ஆண்டுகளுக்கு மேலாக வாழ்வோர், தற்போதைய வாழும் மாவட்டத்தைக் குறிப்பிட்டு விண்ணப்பிக்க வேண்டும். விண்ணப்பங்களின் அடிப்படையில் ஏற்புடைய நாளில் முன்னறிவிப்பின்றி விண்ணப்பிப்போரின் தமிழ்ப் பற்றை ஆராயும் வகையில் அலைபேசிவழி நேர்காணல் நடத்தப்பெறும்.

இயக்குநர் (மு.சுஉ.பொ.)